ரஞ்சித போதினி சீரிஸ் 1.

# இரத்தினமாலை

அல்லது

# இருகொலைகளின்

# இரகஸ்யம்.





துப்பறியும் தமிழ் நாவல்.

---

ரஞ்சித போதினியின் ஆசிரியரும்,
தனவதி, வனஜலோசனி,
வனிதாமணி, சாரளாதேவி முதலிய
நாவல்களின் கிரந்த கர்த்தாவுமாகிய

தமிழ்ப்பூஷணம்
வாசுதேவ ராவ் கேய்க்வார் அவர்களால்
இயற்றப்பட்டு,

எம். சம்பந்த முதலியார் அவர்களின்
சென்னை
மாணிக்க விலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1923

 [Price As 6

ரஞ்சிதபோதினி சீரிஸ் நே. 1.




உ

ஜோதிமயம்.

# இரத்தினமாலை.

அல்லது

# இருகொலைகளின் இரகஸ்யம்.

ஓர் இனிமையான துப்பறியும் தமிழ் நாவல்.



இஃது

தமிழ்ப்பூஷணம்

வாசுதேவ ராவ் கேய்க்வார் அவர்களால்

இயற்றப்பெற்றது



எம். சம்பந்த முதலியார் அவர்களின்,

சென்னை

மாணிக்க விலாசம் பிரசில்

பதிப்பிக்கப்பெற்றது.

Registered Copy-right.] 1923. [Price Annas 6.

உ




## நூன்முகம்.



சேந்தமிழ் நண்பர்காள் !

நமது நாடு தற்காலம் நவீனங்களைப்படிப்பதில் மிகுந்த சிரத்தையுடைத்தாயிருக்கின்றதென்பது எவருமறிந்த விஷயமே. நவீனங்களிலும் மதி புகட்டக்கூடிய பல விஷயங்களுடன் நீதிகளை தன்னகத்தடக்கிகொண்டு படிப்பவர்க்கு மதியை விருத்தி செய்து, உலகத்தின்கண் நடைபெறும் கொலை, களவு, வஞ்சனை, சூது, பொறாமை முதலியவிஷயங்களைத் தெள்ளிதின்விளக்கி, நல்லறிவு புகட்டுவதுடன் மனவிசாரமடைந்தகாலத்தில் ஒருவித உற்சாகத்தையளித்து சந்தோஷத்தை யுண்டாக்கும் தன்மையிலிருப்பதுவேயாம். இவ்வித நாவலை பலரும் பலவிதமுறையை யநுசரித்து எழுதிவருவதை யுத்தேசித்து நம் நண்பர்கள் பலர் நம்மையும் சில நாவல்கள் எழுதி வெளியிடுமாறு வேண்டியதின்பேரில் நாமும் அதற்கிணங்கவே, இதைப் பிரசுரிக்க ரஞ்சித போதினியின் பிரசுரகர்த்தாவான ஸ்ரீமான் சம்பந்த முதலியாரவர்கள் பதிப்பித்துப் பிரசுரிப்பதாய்க் கூறியதை யநுசரித்து முதல் முதலாகத் தனிப்பிரசுரமாக இரத்னமாலை அல்லது இருகோலைகளின் இரகஸ்யம் என்னும் இந்நூலை எழுதி முடித்தேன்.

தமிழ் சகோதரர்களே ! நான் மஹாராஷ்டிரநாட்டினனாயும், பாஷைக்கு அன்யனாயுமிருப்பதால் இதில் பல குற்றம் குறைகளிருக்கலாம். இக் குற்றங்களை நீக்கி குறைகளைப் புறக்கணித்து இந்நூலையாதரித்து என்னையும் கௌரவிப்பீர்களெனப் பிராத்திக்கின்றனன்.

இங்ஙனம்:

தமிழ்ப்பூஷணம்
வாசுதேவ ராவ் கேய்க்வார்,
தமிழ் கல்வி யபிவிர்த்தி போஷகர்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.



# இரத்தினமாலை.

அல்லது

# இருகொலைகளின் இரகஸ்யம்.



## அத்தியாயம் 1.

### நாடக சாலையில் நவீன திருட்டுங் கொலையும்.



மதுரையில் ஓர்தினம் மாலை 5-மணி சுமாருக்கு நான்கு வாலிபர்கள் ஒருவரோடொருவர் சம்பாஷித்துக்கொண்டே பீமவிலாஸ் காபி ஹோட்டலுக்குள் நுழைந்தனர். அச்சமயம் நால்வரில் ஒருவன் மற்ற மூவரைப்பார்த்து "நண்பர்காள்! நாம் வரும்போது நம்மைக் கண்டு பேசிய இராமலிங்கம்பிள்ளையைக் கவனிக்காமலே வந்து விட்டோமே. இது ஒரு பெரிய தப்பிதமன்றோ?" என்று கூறினான்.

மூவரில் ஒருவனாகிய முத்துசாமி முருகேசத்தை நோக்கி "ஆம் உண்மையே. நானும் மறந்துபோய் விட்டேன். நீ சென்று உடனே அழைத்துக்கொண்டு வா" என்று விரைவுடன் கூறினான்.

முருகேசன் உடனே வெளியே வந்து விக்டோரியா மிமோரியல் ஹாலை நோக்கிச்செல்லும் இராமலிங்கத்தைக் கைதட்டிக் கூப்பிட்டான். அவன் திரும்பிப்பார்த்து முருகேசனை நோக்கி வந்தான்.

முருகேசன் இராமலிங்கத்தின் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு நேரே பீமவிலாசத்துக்குள் நுழைந்து மூவரும் அமர்ந் திருக்கும் மேஜையண்டை போய் உட்கார்ந்தனர். நால்வரும் ஏதோ பேசிக்கொண்டே யிருந்தனரெனினும் இராமலிங்கம்மட்டும் இவர்க ளோடு பேசிக்கொண்டே தன் எதிர்ப்புறத்துள்ள மேஜையின்முன் உட்கார்ந்து ஐஸ்கிரீம் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் ஒரு செட்டியார் மீதே நோக்கம் வைத்திருந்தான். இச்சமயம் ஸப்ளேயர் வந்து "ஸார் என்ன கொண்டுவரட்டும்" என்றான்.

முருகேசம்:— "ஸ்வாமி! ஆளுக்கொரு பிளேட் ஜாங்கிரியும், ஒரு பிளேட் குலாப் ஜாமும், ஒரு பிளேட் பஜ்ஜியும், ஒரு கப் காபி யும் கொண்டுவாரும்" என்றான்.

பிராமணன் கொண்டுவந்தவைகளை நால்வரும் உண்ண ஆரம் பித்தனர் இராமலிங்கமட்டும் "எத்தவத்தைச் செய்தாலும் எத வஸ்தைப்பட்டாலும் முக்தர்மனமிருக்கும் மோனத்தே" என்பது போல தான் மோசூல்வைத்த செட்டியார் மீதே கண்ணோட்டமா யிருந்தான். இந்நால்வரும் காபியருந்தி வெளிப்பட்டார்கள். செட் டியாரும் காபிசாப்பிட்டு வெளியில் கார்த்திருந்த தனது மோட்டாரி லேறிக்கொண்டு நேரே விக்டோரியா மிமோரியல் ஹாலைநோக்கி ஓட்டச்சொல்லி வண்டியோட்டிக்கு உத்தரவிட்டார். வேகமாக மோட்டார் குறித்தவிடம் போய் நின்றது. முதல்கிளாஸ் டிக்கெட் வாங்கிக்கொண்டு உள்ளேபோய் அமர்ந்தார்.

நான்கு சிநேகிதர்களும் நேரே ஹாலைநோக்கி நடந்துபோய் முதல்வகுப்பு டிக்கெட்பெற்றுக்கொண்டு உள்ளே சென்று ஆசனங் களில் அமர்ந்தனர். ராமலிங்கம்மட்டும் செட்டியாரின் பின்புறத்தில் உட்கார்ந்துக்கொண்டு தனது தினசரி குறிப்புப் புத்தகத்தில் ஏதோ குறித்துக்கொண்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் விளக்குகள் அணைக்கப்பட்டன. எதிரிலிருந்த வெள்ளைப்படுதாவில் காணப்படும் காக்ஷிகளைப் பார்த்துக்கொண்டே யிருந்தார்கள், அன்றையதினம் விசேஷமான கூட்டம். "பிரக்கியாதிபெற்ற ஓர் திருடனின் சாமார்த் தியம் என்ற ஆங்கில நாடகம்" என்ற துண்டுப்பிரசுரத்தின்விசேஷமே அதிக கூட்டத்திற்கு காரணம். நாடகம் ஆரம்பிக்கப்படுமுன் வேடிக் கைக்காட்சிகள் காட்டப்படுவதுபோல முதல் காட்சி முடிந்ததும்

நாடகம் ஆரம்பிக்கப்பட்டது. இராமலிங்கத்தின் முன்புறம் இருந்த செட்டியார் எங்கே போனாரோ காணவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தான். செட்டியார் ஸ்திரிகள் இருக்கும் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறார். ராமலிங்கமும் தனது பார்வையை அவர்மேலேயே செலுத்தியிருந்தான். சிறிது நேரத்துக்குள் நாடகம் முடிந்தது. ஆனால் ஒரு சப்தம் கிளம்பியது. அது எவ்விடத்திலிருந்து வந்தது என்பது சிறிது நேரத்திற்குள் விளங்கிற்று. அதாவது ஸ்திரிகளிருக்கும் பக்கத்திலிருந்து கிளம்பிற்று. "கொலை! கொலை!! கொலை!!! காயமேயில்லாத கொலை" என்று மட்டும் கிளம்பிற்று. இதற்குள் இராஜரத்தினம் என்னும் துப்பறிபவர் வந்து சேர்ந்தார்.

கூட்டம் கலைந்ததெனினும் வெளியில் ஒருவரையும் செல்லவிடவில்லை. ஆனால் இச்சமயம் இன்னொரு கூச்சல் கிளம்பியது. அது "இரத்னமாலையே கொல்லப்பட்டவள், அவளது கையிலிருந்த விலையுயர்ந்த மோதிரம் காணப்படவில்லை" யென்பதே.

இதே சமயத்தில் அங்கு காவலாயிருந்த போலீஸ்காரர்கள் டெலிபோன் மூல்யமாய் போலீஸ் இனிஸ்பெக்டரையும், சூப்பிரண்டெண்டையும் வரவழைத்தனர். காட்சிசாலை அமளிகுமளியாயிருந்தது. சிறிது நேரத்துக்குள் போலீஸ் சூப்பிரண்டெண்ட், இன்ஸ்பெக்டர், ஜில்லா மாஜிஸ்டிரேட் முதலியவர்களும், இன்னும் அநேக கான்ஸ்டேபில்களும் வந்து சேர்ந்தனர்.

காட்சி மண்டபத்துள்ளிருந்த ஜனங்களை யொவ்வொருவராய் சோதித்து வெளிவிடபட்டது. ஆனால் ஒருவரிடத்திலும் நகை யகப்படவேயில்லை. புருஷர்களெல்லாம் சென்றபின் ஸ்திரீகளை, ஸ்திரீகளைக்கொண்டே பரிசோதிக்கப்பட்டது. ஆனால் நகைகிடைக்கவேயில்லை.

பிரேதத்தின் அருகே ஜில்லா மாஜிஸ்டிரேட், சூப்பிரண்டெண்ட், இன்ஸ்பெக்டர், துப்பறியும் ராஜரத்தின முதலியாரவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

பிரேதபரிசோதனை செய்வதற்கு இவர்கள் ஆயத்தப்பட்டுக்கொண்டிருக்கும் சமயம் செட்டியார்மீதே நோக்கமாயிருந்த ராமலிங்கம் வைத்திய வேடம் பூண்டு அங்கே வந்து சேர்ந்தார்.

வைத்தியர் வந்ததும் அவரை யுள்ளே அழைத்துப் போகப்பட்டது. அதே சமயம் துப்பறியும் ராஜரத்தினம் வைத்திய வேடம் பூண்டுள்ள ராமலிங்கத்தைப் பார்த்தான்.

"வைத்தியரே! இந்த பிரேதத்தைப் பரிசோதித்து எவ்வித ஆயுதத்தினல் கொலை செய்யப்பட்டிருக்கிற தென்பதைக் கூறுங்கள்" என்றான்.

நமது துப்பறியும் ராமலிங்கத்தின்முன் ராஜரத்தினம் ஒன்றும் செய்யமுடியாது. ராமலிங்கம் பிரக்யாதி பெற்ற துப்பறியும் உத்தியோகஸ்தன். சென்னையில் அநேக சிக்கலான கேஸ்களையும், பிறரால் காணமுடியாத கேஸ்களையும் கண்டு பிடித்தவர். தற்காலம் மதுரையில் பிரபலமான ஒரு வியாபாரியான ஷண்முகஞ்செட்டியார் மீது மோசூல் செய்து வருவதற்காகவும், சென்னையில் களவடப்பட்டு கொலை செய்யப்பட்டாளென்றும் நிரூபிக்கப்பட்டுமுள்ள லக்ஷ்மிகாந்தம் என்பவளைத் தேடியும் வந்திருக்கிறார். இவர் இதே காக்ஷி மண்டபத்தில் ஒரு செட்டியார் மீது போசூல் செய்த விஷயம் வாசகர்களின் மனதிலிருக்கு மன்றோ?

துப்பறியும் ராஜரத்தினம் கூறியதைக்கேட்ட ராமலிங்கம் "சரி" யென்று கூறிப்பரிசோதித்துப் பார்த்து எங்கும் காயமில்லாமலிருக்கக் கண்டு ஆச்சரியப்பட்டுத் தனக்குள்ளேயே "என்ன சாமர்த்தியம். குளோரபாரம் செய்த வேலையல்லவா இவ்வளவும், ஷண்முக செட்டியாரே! நீர் எவ்வளவு புத்தி சாதுர்யத்துடன் செய்தாலும் உம்மிடத்தில் ஒரு முட்டாள் தனமில்லாமலில்லை. அப்படியிருப்பதினலேதான் துப்பறிபவர்களுக்குத் துப்புதுலங்கும் எவ்வளவு ஜாக்கிரதையோடு செய்தாலும், பயம் என்பது எத்தகைய தைரியசாலிக்கும் ஜனிக்கின்றதென்பதைக் கண்டேன்" என்று எண்ணிக் கொண்டே கீழே குனிந்தார். அங்கு ஒரு மோதிரமும், ஒரு கடுதாசி உரையு மிருந்தது. இதை யொருவரும் கவனிக்கவே யில்லை யென்பதை யறிந்து நமது ராமலிங்கம் இரண்டையும் பத்திரப்படுத்திக் கொண்டே இரத்ன மாலையைப் பரிசோதிப்பவர்போல நடித்து, குளோரபாரம் ஏறியதும் உண்டான விஷத்தின் வேகத்தால் கீழ் விழுந்தபோதுண்டான ஒரு சிறு காயத்தைக் காட்டி, "இப்பெண்மணி சப்தமும் புகையுமற்ற (Noiseless & Smokeless) ரிவால்வரினல் சுடப்பட்டிறந்தாள்" என்று கூறினர்.

துப்பறியும் இராஜரத்தினம் அதை யுண்மை யென்றெண்ணிக் கொண்டு ஏதோ சிலவற்றைத் தன் தினசரிக் குறிப்புப் புத்தகத்தில் குறித்துக் கொண்டார். ஜில்லா மாஜிஸ்டிரேட்டும் போலிஸ் சூபிரண்டெண்டும் இராஜரத்தினத்தை நோக்கி "மிஸ்டர் ராஜரத்தினம்! இதை நீர் கண்டு பிடித்து விட்டால் உமக்கு தக்க வெகுமதியளிக்கப் படும் இதோடு கூட இத்தகைய விஷயங்களை உம்மாலன்றி, வேறு எவராலும் கண்டு பிடிக்கமுடியாதென்பது திண்ணம் எவ்வளவுக்கு எவ்வளவு சீக்கிரம் கண்டு பிடிக்கின்றீரோ அவ்வளவுக்கவ்வளவு நன்மையாகும்" என்று சொன்னார்.

இதே சமயம் இரத்னமாலையின் தகப்பனார் அங்கே வந்து சேர்ந்தார். ராமலிங்கம் அவரைப் பார்த்ததும் சிறிது விலகியவர்போல் அசைந்தார்.

ஜில்லா மாஜிஸ்டிரேட்டும், சூப்பிரண்டெண்டும் அவரைப் பார்த்து வந்தனம் செய்து விஷயத்தைக் கூறினர்.

இரத்னமாலையின் தகப்பனாருக்கு முகத்தில் ஈயாடவில்லை. மௌனம் சாதித்து நின்றார். இச்சமயம் அவரைப் பார்த்து ஜில்லா மாஜிஸ்டிரேட் கூறுகிறார்.

"ஐயா! சோமசுந்தரம் பிரபுவே! தாங்கள் விசனப்படுவதில் இனியென்ன பயன்? நடந்தது நடந்து போய்விட்டது. இனி நடக்கவேண்டியதைப்பற்றி சிந்தியுங்கள். கொலையாளியைக் கண்டு பிடிக்க நமது துப்பறியும் நிபுணர் இராஜரத்தினம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறார்" என்றார்.

பிரபு சோமசுந்தரம்:—அப்படியானால் மிக்கநலமே. இக்கொலையாளியைக் கண்டுபிடிப்பவர்களுக்கு ரூ 50,000 இனம் அளிக்கத் தயாராய் இருக்கிறேன்" என்று கூறிவிட்டுப் பிரேதத்தின் அருகே சென்றார்.

போலீஸ் அதிகாரியும் ஜில்லா அதிகாரியும் போலீஸார்களும் துப்பறியும் ராஜரத்தினமும் போய் விட்டார்கள். ராமலிங்கம் மட்டும் இரத்னமாலையின் அருகே யிருந்தார்.

பிரபு சோமசுந்தரம் இரத்னமாலையின் அருகில் வந்ததும் ராமலிங்கம் பிரபுவுக்கு மரியாதை செய்து இரகஸ்யமாய் "பிரபுவே! தயவு செய்து இரத்னமாலையை வண்டியில் போட்டு வீட்டுக்குக்கொண்டு போங்கள். எல்லாம் வீட்டில் பேசிக்கொள்ளலாம்" என்றார்.

பிரபுவும் நமது ராமலிங்கத்தின் சொற்படியே தனது மோட்டாரில் இரத்னமாலையை தானும் ராமலிங்கமுமாகப் பிடித்துக்கொண்டு போய் படுக்கவைத்துக் கொண்டு நேரே வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

## அத்தியாயம்—௨.

## ராமலிங்கம் யார்?

ராமலிங்கம் சங்கரலிங்கம் பிள்ளைக்கும் சண்பகம்மாளுக்கும் ஏகபுத்திரனாகப் பிறந்தவர். இவர்கள் வேலூரில் வசித்து வந்தனா. ராமலிங்கத்தை இளமையில் கற்கப் பள்ளியில் வைத்தனர். இவர் மெட்ரிகுலேஷன் பரிக்ஷைகொடுத்து மேலே மீண்டும் கல்விகற்கப் பிரியப்பட்டு வூரிஸ் காலேஜில் இரண்டு வருஷம் ஸீனியர் எப். ஏ. (F. A.) வகுப்பில் தேறினார். இவருக்கு ரசாயனசாஸ்திர ஆராய்ச்சியில் மிகுந்த பழக்கம். அதன் மூலமாகத் துப்பறியும் வேலை செய்வது மிகவும் சுலபமென்பது அவருடைய கொள்கையா யிருந்தது. இவ்விதமிருக்கின்றசமயத்தில் பெற்றோர்கள் பிள்ளைக்குக் கலியாணஞ் செய்யவேண்டு மென்று பெண்தேடிக் கொண்டிருந்தார்கள். இவ்விஷயம் கேள்விப்பட்ட நமது ராமலிங்கம் மனம்பொருந்தாகித் தனது மனதிலேற்பட்டிருந்த துப்பற்றியும் தொழிலை மேற்கொண்டு பேரும் பிரக்கியாதியும் பெறுதற் கெண்ணித் தனது பெற்றோருக்குச் சொல்லிக்கொள்ளாமலே சென்னைசேர்ந்து மண்ணடியில் பவழக்காரத்தெருவில் வசித்துக்கொண்டு வந்து தனது கோரிக்கை யீடேறவேண்டிய பிரயத்தன மெல்லாஞ் செய்துகொண்டு வரும்சமயம் இவரிடம் பல சிக்கலான கேஸ்கள் வர அதில் தலையிட்டு அவைகளைக் கண்டு பிடித்து அரசங்கத்தாரால் அநேக தங்கப் பரிசுகளும் பணப்பரிசு

களும் பெற்று மிகப்பிரக்யாதியுடன் வாழ்ந்து வரும்சமயம், சென்னை யில் சவுகாரப்பேட்டையில் பெரிய பிரபுவும் கோடீசுரருமான ஜக நாதம்பிரபுவின் வீட்டில் ஒரு கொலைக் கேஸ் நடந்தது. அச்சமயம் சென்னையிலுள்ள போலீசு அதிகாரிகள் அதை ஆராய்ச்சி செய்து கண்டு பிடிக்கமாட்டாமல் விட்டு விட, ஜகந்நாதம் பிரபு மனமுடை ந்து தமது புத்திரியைக் கொலை செய்த கொலையாளியைக் கண்டுபிடிப் பவர்களுக்கு ரூபாய் 50,000 கொடுப்பதாய்வாக்களித்தும், பத்திரிகை களில் பிரசுரம் செய்து மிருந்ததைப் பார்வையிட்ட ராமலிங்கம் சென்னையில் அநேக விடங்களில் துப்புவைத்தும் துலங்காமையினல் இதைக் கண்டு பிடிக்காமல் விடுவதில்லை யென்னும் நோக்கத்துடனும், இன்னும் பலவித காரணங் கொண்டும் மதுரை சேர்ந்த இரண்டா மாதம் முன் அத்தியாயத்திற் கண்ட சம்பவம் நிகழ்ந்தது.

இரத்தினமாலையை வீட்டுக்குக் கொண்டு போனதும் ஓர் கட்டி லிற் கிடத்தி யவளுக்கு கொடுத்திருந்த குளோரபாரத்தின்வேகத்தை தணிக்ககூடிய மருந்தைக்கொடுத்துச் சிறிதுநேரம் வெந்நீரில் கம்பளி யை நனைத்து முகத்திலும் மார்பிலும் ஒத்தடம் கொடுக்கப்படவே குளோரபாரத்தின் வேகம் தணியத்தணிய சிறிது சிறிதாக மூச்சுவர ஆரம்பித்தது. அதே சமயத்தில் ராமலிங்கம் தனக்குக்கிடைத்த மோதிரத்தையும் காகித உரையையும் விளக்கு வெளிச்சத்தில் எடுத் துப் பார்த்தான். பிரகாச மிகுந்த வைர மோதிரத்தின் ஒளி ராம லிங்கத்தையும் சிறிது தடுமாறச்செய்ததெனினும் அதன் அழகை யும் பளபளப்பையும் திருப்பிதிருப்பிப் பார்த்துவிட்டுக் கடித உரை யைப்பிரித்துப் பார்த்தான். அதில் ஷண்முகம் செட்டியார், மெடல் பாக்டரி, மதுரை" என்ற சந்திப்புக் கடிதமும், சவுரிமுத்து, ஏஜெண்டு மெடல் பாக்டரி மதுரை" என்றுள்ள சந்திப்புக் கடிதமும், சென்னையி லிருந்து வந்த ஒரு நீண்டகடிதமும் காணப்பட்டது. இவ்விரண்டை யும் அக்கடிதத்தையும் பார்த்துவிட்டு இரத்தினமாலை படுத்திருக்கும் பக்கம் திரும்பினன். அதேசமயம் இரத்னமாலை கண்களை திறந்து பார்த்தாள். சோமசுந்தரம் பிரபுவும் புத்திரியின் அருகில் வந்து,

"குழந்தாய்! இரத்னம்!! இரத்னம்!!!" என்றார்.

இரத்னமாலை மெள்ள கண்ணை விழித்துப் பார்த்தாள்.

இதேசமயம் ராமலிங்கம் அருகில் வந்து மூக்கில்விரலைவைத்துப் பார்த்து இன்னும் சில நேரம் சும்மாயிருங்கள் என்று சொல்லி ஒரு மருந்துபுட்டியை யெடுத்துக் குலுக்கி அரையவுன்ஸ் அளவு எடுத்து இரத்தினமாலையின் வாயில் ஊற்றினர். சிறிது நேரத்திற்கெல்லாம் இரத்னமாலைக்குப் பிரக்ஞைவந்து விட்டது. அவள் எழுந்து உட்கார்ந்தாள். அவளுக்குக் குடிக்ககஞ்சி கொடுக்கப்பட்டட்டது. அதை குடித்துக்கொண்டிருக்கும் சமயம் ராமலிங்கம் ஒருகடிதத்தை சோம சுந்தரம் பிரபுவினிடம் கொடுத்து விட்டுப் போனர்.

ராமலிங்கம் கொடுத்த கடிதத்தை பிரபு பிரித்துப் படிப்பதில் நோக்கமாயிருந்ததனுலும், குமாரத்தி கஞ்சிகுடிப்பதைக் கவனிக்கும் சமயம்மானதாலும் தன்னிடம் கடிதம் கொடுத்தவரைக் கவனிக்கவே யில்லை. இரத்னமாலை கஞ்சி குடித்தானதும், புத்திரியை நோக்கி, "குழந்தாய்! இரத்தினம்!" என்று கூப்பிட்டார்.

இரத்னமாலை தகப்பனுரை ஏற இறங்கப் பார்த்துவிட்டு மீண்டும் மஞ்சத்தில் படுத்து நித்திரை செய்பலாயினுள்.

பிரபு சோமசுந்தரம் குமாரத்தி நித்திரை போவதைக்கண்டு மன நிம்மதியுடன் ராமலிங்கம் கொடுத்த கடிதத்தைப் பிரித்து வாசிக்க லாயினர்.

"கனம் சோமசுந்தரம் பிரபு அவர்களுக்கு,

தங்கள் குமாரிக்கு இனியாதும் அபாயமில்லை. தாங்கள் பயப் படவேண்டாம். ஆனல் தங்கள் குமாரத்தியின் விஷயம் இரகஸ்ய மாகவே யிருக்கவேண்டும். அதற்காகத் தாங்கள் தங்கள் குமாரித் தியை கோடைக்கானலிலுள்ள வசந்த பங்களாவில் சிறிது காலம் வசிக்கும்படியாக விட்டுவைக்கவேண்டும். கோடைக்கானலுக்கு இரவு 12-மணி வண்டிக்குப் புறப்பட்டுப் போனல் நலம். தாங்கள் போவ தும் வருவதும் ஒருவருக்கும் தெரியக்கூடாது. இரகஸ்மாகவே யிருக்கட்டும். மற்ற விஷயம் பின்னல் விளக்குகிறேன். நான் மேல் கூறியவை ஞாபகத்திலிருக்கட்டும்.

இப்படிக்கு,

ராமலிங்கம்"

இதைப் படித்ததும் சோமசுந்தரம்பிரபுவுக்கு ஒருவிதஉணர்ச்சி தோன்றிற்று. உடனே சிந்திக்கலானர் : "இந்த ராமலிங்கம் யார்? இது நேரபரியந்தம் நமது குமாரத்திக்கு சிகித்சை செய்தவர் நமது ஜில்லாவின் தலைமை வைத்தியசாலையின் பிரதம வைத்தியரும் சுகாதார அதிகாரியுமன்றோ? அப்படியிருக்க இந்த கடிதம்கொடுத்தது ஜில்லா பிரதம வைத்தியரா? அல்லது ராமலிங்கமா? அப்படியானல் இவ்விருவரில் இந்த ராமலிங்கம் யார் ?" என்று சிந்தித்தார் இவருக்கு ஒன்றுமே புலப்படவில்லை.

சிறிது நேரத்திற்கெல்லாம் கடியாரத்தில் மணி பத்து அடித்தது. பரபரப்புடன்பிரபு சோமசுந்தரம்எழுந்து தனதுவாசகசாலைக்குட்சென்று மேஜையின் மேலிருந்த ஒருசிறுபுத்தகத்தை யெடுத்துப் பக்கம் பக்கமாய் திருப்பிப் பார்த்தார்.

"இரவு பனிரெண்டுக்கு ஒருவண்டி மதுரையிலிருந்து திருச்சிஞப்பள்ளிவரையில் போகிறது. அந்த வண்டிதான் சரி" யென்று சொல்லிக்கொண்டே தன் தமக்கையைக் கூப்பிட்டார்.

அந்தம்மையார் தம்பி ஏனே கூப்பிடுகிறன் என்று எண்ணிக்கொண்டே வந்தாள். அவளுக்கு இரத்னமாலையின் விஷயம் ஒன்றுமே தெரியாது. தம்பியின் முன் வந்து நின்ருள்.

பிரபு அவளைப்பார்த்து அக்கா ! நமது இரத்னமாலையை யழைத்துக்கொண்டு நீ கோடைக்கானலுக்குச் சென்று சில காலம் நமது வசந்த பங்களாவில் வசிக்கவேண்டும்" என்ருர்.

"தம்பி! சோமசுந்தரம்! என்ன இருந்தாப்போல் நினைத்துக்கொண்டுகோடைக்கானலுக்குப் போகச் சொல்லுகிருயே" என்ருள்

" இல்லை இல்லை அதிக அவஸ்யமான காரியம் அதாவது நம் குழந்தை இரத்னமாலைக்கு திடீரென்று உடம்புக்கு அசௌக்ய மேற்பட்டு விட்டது வைத்தியர் உடனே இக்குழந்தையை இடம் மாற்வேண்டும் இல்லாவிட்டால அபாயமேற்படும் என்றுகூறினர்"என்ருன்

"தம்பி ! எனக்கு ஏன் தெரிவிக்க வில்லை"

"அந்த சமயம் வைத்தியரைத் தேடுவதிலும் வைத்தியம் புரிவதிலும் இருந்ததனுலும் மனம் நிலைதடுமாறி யிருந்ததனுலுமேதான்" என்ருர்.

உடனே பிரயாணத்திற்கு வேண்டியவைகள் தயாரிக்கப்பட்டது பிரபுவின் தமக்கைமீனுக்ஷியும், இரத்னமாலையும்பிரபுசோமசுந்தரமும் வீதியில்நின்றிருந்தமோட்டாரில்யேறினர்கள். வண்டிஸ்டேஷனுக்குச் சென்றதும் பிரபு இரண்டு முதல் வகுப்பு டிக்கெட் பெற்றுக்கொண்டு வந்து குமாரத்தியையும் தமக்கையையும் வண்டியிலேற்றி விட்டுத் திரும்பினர்.



# அத்தியாயம் 3.

## அங்கயற்கண்ணியும் அச்சுதனும்.

இரத்னமாலையின் கொலை நடந்து ஒரு பக்ஷத்திற்கு மேலாகியும் ஒருவிஷயமும் தெரியவில்லை மதுரையில் வெளியாகும் தென்னிந்திய மித்திரன் பத்திரிகையில் இரத்தினமாலையின் கொலையைப்பற்றிய விஷயங்களே பிரசரிக்கப்படுகின்றன. மதுரை வாசிகளும் கொலையின் முடிவை யறியவேண்டிய ஆவலுடையவர்களாகவே யிருக்கின்றனர். மதுரை நகரத்துச் சுவர்களிலெல்லாம் பெரிய பெரிய பிரசுரங்கள் ஓட்டப் பட்டிருக்கின்றன. அவை:- பிரபு சோமசுந்தரம் அவர்களின் ஏக புத்ரியாகிய இரத்ன மாலையைக் கொன்ற கொலையாளியைக்கண்டு பிடிப்பவர்களுக்கு ரூபாய் 50,000மும், தங்கப் பதக்கமும் இனுமளிக்கப்படும்.

இப்படிக்கு,

ஜுலைமீ 15உ ஜில்லா போலீஸ் சூபரின்டெண்ட்

ஜனங்கள் பிரதிதினம் இதே விஷயத்தை அங்கங்கே இருவர் மூவர்களாகக் கூடிக் கூடிப் பேசுவதே தொழிலாக யிருந்தனர். ஆனல் நாளாக நாளாக இதெல்லாம் பறந்து போயிற்று இரத்னமாலையின் கொலையைப் பற்றிய விஷயம் பேசுவது நின்றே போயிற்று. துப்பறியும் இராஜரத்னம் மதுரையில் தேடாத இடமே யில்லை.

ஒரு நாள் ராஜ்ரத்னம் வடக்கு மாசி வீதியில் இருபத்திரெண்டாம் நெம்பருள்ள தனது சொந்தமாளிகையில் உட்கார்ந்திருக்கும் சமயம் ஒருசிறுவன் கடிதம் ஒன்றைக்கொண்டு வந்து கொடுத்து விட்டுச்சென்ருன். அதில் கீழ்கண்டவாறு வரையப்பட்டிருந்தது.

" மிஸ்டர் ராஜரத்னம் அவர்கள்,
துப்பறியும் உத்தியோகஸ்தர்'
மதுரை.

அன்பின்மிக்க ஐயா !

உடனே தாங்கள் புறப்பட்டு நமது பங்களாவுக்கு வரவேண்டும் தங்களிடத்தில் சில விஷயங்கள் பேச வேண்டிய அவஸ்யம் ஏற்பட்டிருக்கிறது. அவசரமான விஷயம் உடனே புறப்பட்டு வரவும்.

இப்படிக்கு,
ஷண்முகம் சேட்டியார்.

இக்கடிதம் கையில் கிட்டியதும் நமது துப்பறியும் ஆசாமி உடன புறப்பட்டு செட்டியார் பாக்டரியை நோக்கிச் சென்ருர்.

ஷண்முகம் செட்டியார் முன் சென்னையிலிருந்து வந்தார். ஏதோ காரணத்தால் சென்னையை விட்டு மதுரைக்கு வந்து அங்கு அநேக இயந்திரங்களை வரவழைத்து அதன் மூலமாய் பித்தளை வெண்கலம் அலுமினியம் செம்பு முதலிய உலோக வகைகளைக்கொண்டு பாத்திரங்களைச்செய்து வெளிநாடு உள் நாடுகளுக்கனுப்பி வந்தார். அதில் ஏராளமான லாபம் கிடைக்கவே மதுரையில் வண்டியூர்போகும் சாலையில் ஓர் பெரிய பங்களாவும் தொழிற்சாலையும் ஏற்படுத்திக்கொண்டு நடத்தி வந்தார்.

நமது துப்பாளியான ராஜரத்னம் சீட்டைக்கண்டதும் உடனே புறப்பட்டு மெத்தை விட்டு வீதிக்கு வந்து எதிரில் நின்றிருக்கும் தன் மோட்டார் சைகிலில் ஏறிக்கொண்டு செட்டியார் பங்களாவை நோக்கிப் புறப்பட்டுப் போனார்.

மதுரை மீனுக்ஷியம்மன் ஆலயத்திற்கு மாலை 7-மணி சுமாருக்கு ஒரு பெண்மணி மிகவும் ஒயிலுடன் வெள்ளை வஸ்திரம் அணிந்து கொண்டும், வைரப் பணிகள் பூண்டு கொண்டும் பிரவேசித்தாள்.

அவள் பின்னால் ஓர் வேலைக்காரன் கையில்பூக்குடல் எடுத்துக்கொண்டு பின் தொடர்ந்து போனான்.

நேரே யிருவரும் அம்பிகையின் ஆலயத்துள்புகுந்து அர்ச்சகரிடம் பழம், தேங்காய், கற்பூரம், புஷ்பம்முதலியவைகளைக் கொடுத்து விட்டு இருவரும் நின்றனர்.

ஆர்ச்சகர் அம்பிகைக்கு கற்பூரம் ஆரத்திசெய்து அம்பிகைப்பிரசாதங் கொண்டு வந்து கொடுத்தார். அதையிருகைளினாலும் பெற்றுக் கொண்டாள் வனிதை. அச்சமயம் தவறி விழுந்தது தேங்காய் முடி அப்பொழுதே வனிதைக்கு அரைமனதாயிற்று. விழுந்ததையெடுத்துக்கொண்டு இருவரும் வெளியே வந்தனர்.

வனிதாமணி தன்னுடன் வந்த ஆளை நோக்கி, "அச்சுதா! இன்று அசுபமான சகுனம் ஏற்பட்டதே இது என்மனதை மிகவும் வாட்டுகின்றதே" என்றாள்.

" அங்கயற்கண்ணம்மா ! நீங்கள் ஏன் வருந்து கின்றீர்கள் ? என்ன அபசகுனம் ஏற்பட்டது."

"அச்சுதா! நீ கவனிக்கவேயில்லையா ?

"நான் அம்பிகை மீனாக்ஷியின் சிங்காரத்தையும், அடுத்தாப்போல ஒருவர் தோத்திராஷ்டகம் பாடிக்கொண்டிருக்க கவனித்துக்கொண்டிருந்தேன்"

" இவ்வளவு தானா உன்னுடைய புத்தி. "

" ஏனம்மா! அப்படி சொல்கிறீர்கள் ? " என்றான் அச்சுதன்.

இச்சமயம் இவர்கள் பின்னால் சுத்தசைவ பண்டிதர், ஒருவர் கழுத்தில் கௌரி சங்கரம் தரித்து வீபூதியைக் கட்டுகட்டாய்ப் பூசிக்கொண்டு கண்ணைமூடிக்கொண்டு ஜபம் செய்து கொண்டிருந்தார். இதை அங்கயற் கண்ணி கவனிக்கவே யில்லை. அவ்விடத்தில் சிறிது நேரம் உட்கார்ந்து போவோம் என்று சொல்லி யுட்கார்ந்தாள் அங்கயற்கண்ணி. அச்சுதனும் எதிரில் தூர உட்கார்ந்தான்.

"அச்சுதா! இன்னும் நகர்ந்து வா" "என்றாள்.

"வந்து விட்டேன்" என்று சொல்லிக்கொண்டே அருகில் வந்து உட்கார்ந்தான்.

"இன்று நடந்த அபசகுனம் என்னவென்று தெரியுமா?"

"தெரியாது"

"அர்ச்சகர் இருக்கிறாரே அவர் அம்பிகையின் பிரசாதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாரே."

"ஆம். அதற்கென்ன"

"அதற்கென்னவா? சொல்வதைக் கேள்"

சொல்லுங்கோ "

"அந்தப்பிரசாதம் தவறி விழுந்தது"

"அது சஜகஞ்ஞதன் கைதவறி விடுவதுண்டு."

"அது தான் கூடாது என்கிறேன்"

"என் ?"

"ஏனென்று கேட்கிறாய் ?"

"இல்லை எனக்கு தெரியச் சொன்னால் நல்லது'!

"நம்ம செட்டியார் இருக்கிறாரே அவர் ஒருநாள் பயாஸ்கோப்புக்குப் போயிருந்தார்."

"எப்போ ?"

"ஒரு மாதத்திற்கு முந்தி"

"ஆம் அதற்கென்ன இப்போ"

" அச்சமயம் இவ்வூர் பிரபலந்தராகியப் பிரபு சோமசுந்தரம் அவர்களின் புத்திரி இரத்னமாலையும் அதே நாடகம் பார்க்க பயாஸ் கோப்காக்ஷிசாலைக்கு வந்திருந்தாளாம்.

" சரி, இருக்கலாம் ஏனென்றால் நம்மசெட்டியாரைவிட எவ்வளவோ ஆஸ்தியுடைய பிரபுவின் ஏகபுத்திரி யல்லவா? என்றான் அச்சுதன்.

"ஆம். ஆம். பிரபலஸ்தரான சீமானின் புதல்வியாகிய இரத்னமாலைகையில் ஒருமோதிரம் இருந்ததாம்.'

"ஆஹா! இருக்கலாம் ஏன் இருக்கப்படாது, நானும் கேள்விப் பட்டிருக்கிறேன் அதோடு கூட அதன் விலையும் அதிகமென்றே கேள் விப்பட்டிருக்கிறேன்

"எவ்வளவிருக்கு மென்று கேள்விப்பட்டிருப்பாய்?"

"அவர்கள் பங்களா மானேசர் தாமோதரம் பிள்ளை ஒருநாள் செட்டியார் ஓர்க்ஷாப்புக்கு வந்து பேசிக்கொண்டிருக்கும்போது செட்டியார் அந்த மோதிரத்தைப் பற்றிக்கேட்டார் அதற்கு தாமே தரம்பிள்ளை இருபது லக்ஷம்ரூபாய் பெறுமான முள்ளது. என்றார் எனக்கு இதைக்கேட்டதும் ஆச்சரியம் பொங்கியே போயிற்று. இருக்குமா யென்ற எண்ணத்தினால் என்மனம் அலைந்தது. என்றான் அச்சுதன்.

"அந்த மோதிரத்தை தான் இரத்தினமாலை கையில் அணிந்து கொண்டு வந்திருந்தாளாம்."

"இருக்கலாம்:"

" அதை அபகரிக்கும் பொருட்டு மனதில் எண்ணமுடையவ ராய் கையில் இரண்டுமாதத்துக்குமுன் வரவழைத்த புகையும் சப் தமுமில்லாத கைத்துப்பாக்கியுடன் சென்று நாடகசாலையில்டிக்கெட் பெற்றுக்கொண்டு முதல் வகுப்பில் உட்கார்ந்தாராம். பயாஸ் கோப்காட்டவேண்டி காந்தவிளக்குகளை (Electric lights) அணைத் ததும் அம்மங்கையின் அருகேசென்று அதன் வில்லையழுத்தினார் அது புதியதாயும் உபயோகப்படுத்தப்படாததுமானதால் அதனால் அவளை யொன்றுஞ் செய்யமுடியாமைகண்டு தன் கையிலிருந்த குளோரபாரம் என்னும் மயக்கம்தரும் மருந்தையவளுக்கு சுவாசத் திற்புகட்டி அவள் மூர்ச்சையாய் விழுமுன்பு அவள் கையிலிருந்த மோதிரத்தை கழற்றினார். அதுவும் தவறிக்கீழேவிழுந்து விட்டது இதற்குள் மணியடிக்கும் சப்தம்கேட்கவே இண்டர்வெல்விடும் சமயம் என்று எண்ணியவ்விடம் விட்டுப் புறப்பட்டு வெளியேவந்து விட்டார். நல்லசமயம் இவர் வெளிவரும்வரை விளக்குகள் பிரகாசிக்காமற்போய் விட்டன. செட்டியார்வெளியே வந்து மோட்டாரேறிக்கொண்டு வீடு வந்து விட்டார். என்றுகூறினாள் அங்கயற்கண்ணி.

" ஆமாம் அது நடந்துதான் கிட்டதட்ட ஒரு மாசத்துக்கு மேலே ஆச்சுதே. அதற்கும் இப்போ நடந்த அபசகுனத்துக்கும் என்ன அம்மா சம்மந்தம் " என்றான் அச்சுதன்.

" அச்சுதா ! நம்மசெட்டியாருக்கு இதைப்பற்றி ஏதாவது கெடுதிநடக்குமோ என்று பயப்படுகிறேன்.

போங்கம்மா இதனாலே ஒரு கெடுதியும் நடக்காது "

" என்ன அச்சுதா இவ்வளவு துணிவாய்க்கூறுகிறாய்"

" பெரிய பிரபு அதுவுமல்லாமல் பெரியதொழிற்சாலையின் அதிகாரி. அதிலும் சொந்தக்காரர். இவர் மீது குற்றம் சுமத்த யாருக்குத்தைரியம் வரும் " என்று கூறினான் அச்சுதன்.

" அச்சுதா ! அப்படிச்சொல்லாதே. நமது நகரில்துப்பறிவதில் நிபுணனான இராஜரத்தினம் என்பவன் துப்புத்துலக்க வழிதேடிக் கொண்டிருக்கிறானாம்; இதையெல்லாம் கேட்ட என்மனம் துடி துடித்துக்கொண்டேயிருந்தது இதுவெல்லாம் ஒழிந்து சுகம்கொடுப்பாள் மீனாட்சியென்று மனோதைரியங்கொண்டு இங்குவந்தேன் வந்த இடத்தில் அபசகுனம் ஏற்பட்டதே யென்ற திகில் அதிகமாயிருக்கிறது. " என்று கூறிக்கொண்டே கண்ணீர் வடித்தாள்.

" அம்மா ! இது என்ன ஸபத்தியக்காரத்தனமாயிருக்கிறதே. நீங்கள் விசனப்படாதீர்கள்- துப்புதுலக்க ராஜரத்தினத்தால் ஒரு காலும் முடியாது. " என்றான் அச்சுதன்.

இம்மொழிகேட்டதும் அங்கயற்கண்ணி அச்சுதனைநோக்கி கூறுகிறாள்.

" அச்சுதா ! ராஜரத்தினம் மதுரையில் மிக்கபிரக்கியாதிபெற்றிருக்கின்றானென்று கேள்விப்படுகிறேனே ? என்றாள்.

" அதெல்லாம் வெறும் பேச்சு.

" என்னவோ நீ கூறுவதை பார்த்தால் எனக்கு மிகவும் ஆச்சரியமாகவேயிருக்கிறது.

'என்ன அம்மா ? ஆச்சரியமென்கிறீர்களே! நான் சென்னையி லிருக்கும்போது லட்சுமியின் கொலைக்கேஸ் நடந்தது. அந்தசமயம் இந்த ராஜரத்தினம் அங்கேயும் இதே தொழில் நடத்திக்கொண்டிருந்தார். இவரையும் இவரினும் மிகுந்த சாமர்த்தியசாலியான ராமலிங்கமென்பவரையும், இன்னும்சிலரையும்துப்புலக்கும்படி கூறியதில் தனித்தனி இருவரும் ஒரே விஷயத்தைப்பற்றி துப்பறியப் பிரயத்தனப்பட்டுப் பலவித தந்திரசாமார்த்தியங்களைபுரிந்தும் துப்புத்துலங்காமையால் இராஜரத்னம் இந்தகேசைக்கண்டு பிடிப்பதென்பது கஷ்டமெனக்கண்டு, சென்னையை விட்டு ஜன்மதேசம் போகவேண்டிய அவசரம்ஏற்பட்டதென்றும், அதுவரையில்தான் இதைநிறுத்தி வைப்பதாயும் கூறிவிட்டு வந்தவர் மாதம் மூன்றுக்கு மேலாகியும் இன்னும் கண்டுபிடிக்கமாட்டாமல் தத்தளித்துக்கொண்டிருக்கின்றான். இவனாவது இந்த சிக்கலானருஜுவற்ற கேஸைக் கண்டுபிடிக்கப்போகிறான். போங்களம்மா உங்களுக்குப் பைத்தியமா? அது தான் இப்படிபயப்படுகிறீர்கள். என்று நீண்டவார்த்தைகோர்வைகளினால் அங்கையற்கண்ணியின் செவிகளை நிரப்பினான்.

இம்மொழிகளைக் கேட்ட அங்கையற்கண்ணிக்கு அந்தசமயம் ஆறுதலாகவேயிருந்தது. அதேசமயத்தில் அங்குமாட்டப்பட்டிருந்த பெரிய கெடியாரத்தில் மணி எட்டு அடித்தது.

அச்சுதனும் அங்கையற்கண்ணியும் வீட்டிற்குபோகப் புறப்பட்டார்கள். அதேசமயம் இவர்கள் பின்புறமிருந்து சிரவணம் பண்ணிக்கொண்டிருந்த சைவபண்டிதரும் இவர்களைப் பின் தொடர்ந்தார். இவர்களிருவரும் ஆலயத்தின் வெளியே வந்ததும் நின்றுக்கொண்டிருந்த மோட்டார் வண்டியில் ஏறினார்கள். உடனே மோட்டாரும் கிழக்கு நோக்கிச் சென்றதும்பின்தொடர்ந்தசைவபண்டிதரும்மோட்டார் வண்டியின் நெம்பரைப் பார்த்துக்கொண்டு தன் வழியே திரும்பினார்.



# அத்தியாயம்—4

## இராஜ ரத்தினத்தின்முயற்சி வீணுதல்.

ஷண்முகம் செட்டியார் தொழிற்சாலையில் ராஜரத்தினம் வந்திறங்கினன். செட்டியார் ராஜரத்தினத்தை வரவேற்று இருவரும் ஒரு தனி அறையில் உட்கார்ந்து கீழ்க்கண்டவாறு பேசலாயினர். அச்சமயம் அத்தொழிற்சாலையி னோரத்தில் ஒரு கூலிக்காரன் ஒரு சுமக்கக்கூடிய அளவுள்ள ஒரு சிறிய இரும்புப்பெட்டியை வைத்துக் கொண்டு மரத்தினிழலையுத்தேசித்து சிரமபரிகாரஞ்செய்து கொள்பவன்போல் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு செட்டியாரும் துப்பறியும் ராஜரத்தினமும் பேசும்பேச்சுகள் கேட்ககூடிய நிலைமையில் அங்கு ஒரு ஜன்னலிருக்கின்றது. அதன் அருகிலேதான் கூலிக்காரனும் உட்கார்திருந்தான். இவனை ஒருவரும் கவனிக்கவேயில்லை.

ஷண்முக செட்டியார்:—ஐயா! நம் ஊரில் அநேக நாளாய் கொலை களவு அதிகமாய் நடக்கிறதுபோலிருக்கிறதே.

ராஜரத்தினம்:—ஆம்! ஆம்! அதிகமாகவேநடக்கிறது. இரண்டொருமாதங்களுக்கு முந்திகூட கண்காட்சி மண்டபத்தில் பிரபு சோமசுந்தரம் அவர்களின் ஏகபுத்திரியும் கொலைசெய்யப்பட்டு, அவளுடைய நக்ஷத்திரவைரமோதிரமும் காணுமற்போயிற்று.

ஷண்முகசெட்டியார்:—அந்தக்கொலையும் களவும் செய்தவனைக் கண்டு பிடிக்கவில்லையோ?

ராஜரத்தினம்:—அதே வேலைதான் இப்பொழுது நடக்கிறது. நீங்கள் என்னை வரவழைத்த காரணமென்ன?

ஷண்முகசெட்டியார்:— ஒன்றுமில்லை. ஒரு சிறிய விசேஷம்.

ராஜரத்தினம்:—என்ன விசேஷமோ? அதை கூறுங்கள். நான் அடுத்த மெயிலுக்கு விருதுபட்டிவரை போகவேண்டும்.

ஷண்முகசெட்டியார்:—ஒன்றுமில்லை. சென்னையில் யாரோ துப்பறியும் பிரபல உத்தியோகஸ்தர் இருக்கிறாராமே அவரை உமக்கு தெரியுமா? என்று கேட்கவே வரவழைத்தேன்.

ராஜரத்தினம்:—சென்னையில் பலபேர் இருக்கின்றனர். அவர்களில் அதிகத்திறமையுடையவர்களாக இந்தியரில் ஒருவரும் இல்லையே. ஒரு சமயம் ஐரோப்பியர்களில் யாரேனும் இருக்கலாம்.

ஷண்முகசெட்டியார்:— இல்லை. இல்லை. இந்தியரில் ஒருவர் இருக்கிறாராமே.

ராஜரத்தினம்:—இல்லை. இல்லை. அப்படி இந்தியன் ஒருவனும் இரான்.

ஷ. செ:—ராஜரத்தினம்! ராமலிங்கத்தை நீ யறிவாயா ?

ராஜரத்தினம்:—ராமலிங்கமா ? எனக்குத் தெரியாதே.

ஷ. செ:—அந்த ராமலிங்கம் வெறும் பெயர்வைத்துக்கொண்டு துப்பனென்று எல்லாரையும் மிரட்டுகிறான் அவன் ஒரு சமயம் நான் சென்னையிலிருந்தபோது என்னையே ஏமாற்றப் பார்த்தான் போக்கிரிப்பயல்.

ராஜரத்தினம்:—துப்பறிபவனென்றீரே ? மறுபடியும் போக்கிரியென்கிறீரே.

ஷ. செ:—இல்லை. அவனிடம் மரியாதை யென்பதேயில்லை.

ராஜரத்தினம்:—ஆம். ஆம். எனக்கும் கேள்விதான். ஆனால் அவனை சும்மாவிட்டு விட்டீரா ?

ஷ. செ:—அந்தசமயம் அப்படியிருந்தது விட்டுவிட்டேன். இப்போது போலிருந்தால் அவனை லேசிலா விடுவேன். பக்கத்திலிருக்கிறவர்கள்கூட தெரிந்துகொள்ளாமலே யவனைப்பார்விட்டுநீங்கும்படி செய்து விடமாட்டேனா ?

ராஜாரத்தினம்:—செட்டியாரே ! அந்த லட்சுமி கேசிலே என்னை சம்மந்தப்படவேண்டாமென்றும், அந்த சொத்துகளிலே பாதி சரி பாகமாகக்கொடுப்பதாயும் கூறினீரே ? அது விஷயம் மறந்து போனீரோ ?

ஷ. செ:—மறப்பதுண்டா ?

ராஜரத்தினம்:---பின் எப்போ தருவதாக உத்தேசம்:

ஷ. செ:---கொடுப்ப திருக்கட்டும். லட்சுமி யிறந்து போனது உண்மையா ?

ராஜரத்தினம்.---அதெல்லாம் பொய். அந்த ராமலிங்கமென்பவன் இவ்விடத்திலிருந்தால் இயமலோகம் அனுப்பி விடுவேன்.

ஷ. செ.--நம்போன்றவர்களுக்கு விரோதியாகயிருக்கும் அந்தப் பாதகனை கொல்வதற்காக சீமையிலிருந்து சப்தமும் புகையுமற்ற ரிவால்வர் ஒன்று வரவழைத்தேன்.

ராஜரத்தினம்:---அதைத்தான் அன்று உபயோகித்தீரே ?

ஷ. செ:---யார் செய்தது ? நானுசெய்தேன். நன்ருய் சாட்சி சொல்லுகிறீரே ? பேஷ்.

ராஜரத்தினம்:---ஏன் ? அன்றையதினம் பிரேத பரிசோதனை செய்த ஜில்லா டாக்டர் சொன்னுரே.

ஷ. செ:---ஜில்லா டாக்டர் சொன்னுரா? என்னவென்று சொன்னுர்?

ராஜரத்தினம்:---சப்தமும் புகையுமற்ற கைத்துப்பாக்கியால் சுடப்பட்டிருக்கிறதென்று.

ஷ. செ:--அவர் அப்படி சொன்னதற்காக நான் செய்ததாகக் குற்றம் நீர் சாட்டிவிடுவதா.

ராஜரத்தினம்:---உம்மைத்தவிர வேறு யாரிடத்திலும் இந்தபுது மாதிரியானதுப்பாக்கி இல்லையே.

ஷ. செ:---ராஜரத்தினம் நீ அப்படி எண்ணுவது பிசகு.

ராஜரத்தினம்:---செட்டியாரே ! அதென்னவோ போனதுபோகட்டும். இந்த கேஸ் கண்டுபிடிப்பதற்காக ரூபாய் 50,000 இனும் கொடுப்பதாய் விளம்பரம் செய்திருந்ததையும் நான் கவனிக்காமலே

வேறு எவர்மீதேனும் குற்றத்தை சுமத்தியந்த வெகுமதியை பெற்றுக் கொண்டு சிங்கப்பூர் என்னும் ஜலப்பிரதேசத்துக்குப் போய் விடுவதா யுத்தேசிக்கிறேன்.

ஷ. செ:--ஆனல் இரத்தினமாலைக்கொலைவிஷயம் துப்பு துலங்க வில்லையா ?

ராஜரத்தினம்:---இல்லை. அந்த விஷயம் இனி நம்மிஷ்டம்போல முடிவு செய்து விடலாம்.

ஷ. செ:---அதெப்படி முடியும்.

ராஜரத்தினம்:-- ஏன்முடியாது ? போலீஸ் இன்ஸ்பெக்டர் சகலகுணமும் இன்னுமுள்ள மற்ற போலீசாரும் அந்த விஷயத்தில் பின்வாங்கிவிட்டதுடன் என்னிஷ்டம்போல நடப்பதாகவும் ஒப்புக் கொண்டனரே.

ஷ. செ:---அப்படியானல் இனி இந்த விஷயத்திற்கும் பய மில்லையே.

ராஜரத்தினம்:---அதற்கு என்ன சந்தேகம். நீர் பணம்கொடுக்க வேண்டியதுதான் பாக்கி. நான் அப்படியே புறப்பட்டு சிங்கப்பூர் போய்விடுவேன். கேஸ் கேஸ்தான். சீக்கிரம் நம் கணக்கை டைசல் செய்துவிடும்.

இவ்விதம் ஷண்முகம் செட்டியாரும் ராஜரத்தினமும் பேசிக் கொண்டிருக்கையில் ஜன்னல்பக்கம் ஒரு தலைதெரிந்தது இருவரும் திடுக்கிட்டு எழுந்து ஜன்னல்புறம் வந்துபார்க்க, ஒருவரும்காணுமை யினல் இருவரும்மறுபடியும் ஆசனத்தின்மேல் அமர்ந்த அந்தக்ஷண மே கதவுதட்டப்படும் சப்தம்கேட்கவே, செட்டியார் எழுந்து கத வண்டை வந்து யார் அது ? என்றார்.

" செட்டியார் அவர்களே ! கதவைத்திறவுங்கள், என்ற சத்தம் வந்தது

செட்டியார் சிறிது நிதானித்து ராஜரத்தினத்தை பீரோவின் பின்னல் ஒளித்துக்கொள்ளச் சொல்லிவிட்டு கதவைத்திறந்தார்.

கதவு திறக்கப்பட்டதும் ஒரு கூலிக்காரன் கைப்பெட்டி யொன்றை யெடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான்.

செட்டியார் அவனை நோக்கி நீ எங்கிருந்து வந்தாய்? என்று கேட்டார்.

கூலி:—ஐயா! அனுப்பினுங்கோ.

செட்டியார்:—எந்த ஐயா அனுப்பினது.

கூலி:—அவருதானுங்கோ பிரபு ஐயா!

செட்டியார்:—எந்தப்பிரபு? உலகத்தில் எத்தனையோ பிரபுக் களோயிருக்கிருர்கள். அதிலும் மதுரையிலோ கணக்கு வழக்கில்லை எந்தபிரபுவென்று நான் தெரிந்துகொள்ளுகிறது? கடிதம் ஏதேனும் கொடுத்தாரா?

கூலி:—ஆமாங்கோ ஒரு கடுதாசி குடுத்தாங்கோ ஐயா!

ஷ. செட்டியார்:--கடிதத்தைக்கொடு என்றதும் கூலிக்காரன் மடியிலிருந்து ஒருகடிதத்தை எடுத்து கொடுத்தான். அதைப்பிரித்து வாசித்து பார்த்தார் செட்டியார். அதில் கீழ்கண்டவாறு எழுதி யிருந்தது.

"ஷண்முகஞ்செட்டியார் அவர்கள்,

மெடல் பாக்டரி, மதுரை.

ஐயா!

இக்கடிதம் கொண்டுவருபவன்வசம் ஒரு பெட்டியனுப்பியிருக் கிறேன். அது போல் 500 பெட்டிகள் வேண்டியிருப்பதால் பெட் டிக்குக்கிரயம் என்னவாகுமென்றும் 500 பெட்டிகள் எத்தனைநாளில் கொடுக்கமுடியுமென்றும் ஒரு ஜாபிதா தயாரித்து அனுப்பவேண்டு மாய் கோருகிறேன்.

இப்படிக்கு,

பிரபு சோமசுந்தரம்,

இதைப்பார்த்ததும் செட்டியார்சந்தோஷமடைந்தவராய் கூலிக்காரனிடம் ஒரு ரூபாய் கொடுக்கப்போனர். அவன் அதை நிராகரித்து விட்டு வெளியில் வந்தான். பழையபடி செட்டியாரும் ராஜரத்தினமும் மீண்டும் ஆசனத்தில் அமர்ந்து சப்தமற்றதும் புகையற்றதுமான கைத்துப்பாக்கியை யெடுத்துகெட்டுப்போனதை சரிப்படுத்திக் கொண்டும், பெட்டியை திறந்து நகைகளைப்பார்வையிட்டுக் கொண்டுமிருக்கும்சமயம் ஒருவன் ஐரோப்பியஉடைதரித்துக்கொண்டு அறைக்குள் பிரவேசித்தான். இதைக் கண்டதும் செட்டியாருக்கும் ராஜரத்தினத்துக்கும் ஏற்பட்ட நடுக்கத்திற்கும் அச்சத்திற்கும் அளவில்லை. அதேசமயம் ஒரு அடி முன்னல் வைத்தால் உடனே யமதரிசனம் என்ருன். பின்னும் நடுநடுங்கிப் போனர்களாயினும் அவனது முகத்தையுற்று நோக்கினர்கள். அவன் கையில் சிறிய கைத்துப்பாக்கி பளிச்சென்று பிரகாசித்துக்கொண்டேயிருந்தது. ஆனல் அவன் யாரென்றுமட்டும் தெரிந்து கொள்ளமுடியவில்லை. வந்தவன் இவர்களை யொன்றும் செய்யவில்லை ஆனல் அவர்கள் பார்த்துக்கொண்டிருந்த நகைகளைப்பார்த்துக்கொண்டே செட்டியாரைப் பார்த்து ஷண்முகம்செட்டியாரே! ஒரு பேனவும் கடிதமுங்கொண்டு இந்த நகைகளின்பட்டி யெழுதிக்கொடுத்துவிடும். எனக்கு நகைகள் வேண்டாம். என்று கூறினன்.

செட்டியார்பதில்பேசாமல் இங்கிபுட்டிபேனமுதலியனஎடுத்துவந்து பட்டி எழுதுஞ் சமயம் ராஜரத்தினம் வந்தவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அந்த சமயம் அவன் தன்கையிலுள்ள கெட்டித்த ரிவால்வரைப் பிடித்தவண்ணம் இருவர்மீதும் நோக்கம் செலுத்திக்கொண்டேயிருந்து வந்தமையினல், ராஜரத்தினம்நினைத்தவண்ணம் செய்யமுடியாமல் திகைத்தான். இதற்குள் செட்டியார் பட்டி யெழுதி முடித்தார், அவரையே வாசிக்கச்செய்து வாங்கி சேபியிற்போட்டுக்கொண்டு பின்புறமாகவே நகர்ந்து வெளியில் வந்து கதவைத்தாளிட்டுக் கொண்டு போனன்.

# அத்தியாயம்—5.

## அங்கயற்கண்ணியும் குடுகுடுப்புக்காரனும்.

ஒரு நாள் அதிகாலை ஆதவன் உதயமாகுமுன் ஆகாய ஒளி பிரகாசிக்கும் நேரமிருக்கும். மதுரைமாநகரில் வண்டியூர் தெப்பகுளம் போகும்ரஸ்தாவில் முனிச்சாலை என்னுமிடத்தில் வடக்குபார்த்த ஓர் உயர்ந்த வீட்டின்முன்புறம் ஒருகுடுகுடுப்பாண்டிவந்து நின்றுகொண்டு "அம்பா பலுக்குரு! அம்பாபலுக்குரு! உள்ளதை சொல்டி உத்தமிமகமாயி! நல்வாக்குகொடடா நாயினு! பதினெட்டாம்படி கருப்பா பலிக்கட்டும். ஜடாமுனி சொல்லுடா ஜல்திலேசொல்லு. அம்பாபலுக்குரு! இந்தவீட்டிலே இருக்கிற மீனாட்சி! நல்ல காலம் வருது. ஐயாவுக்குநல்லகாலம் வருது. அம்மாவுக்கு யோகம் வருது, ரோகம் வருது, அம்பா பலுங்குரு! அம்பா பலுக்குரு! நகைமேலே நகைவருது. வைரநகைவருது. துணிமேலே துணிவருது. பட்டுத்துணிவருது. பால்பொங்கப் போவுது. கால் வீங்கப்போவுது. அம்மா! ஜெகதம்பா பல்குடி. நல்வாக்கு சொல்லடி. ஆனைகட்டிவாழும் அத்தனை செல்வம் வரப்போவுது. இனிமேலே ஒண்ணும் கொறவு இல்லே என்று கூறிவிட்டுப் போய்விட்டான்.

இந்த சமயம் அதிகாலை யானபடியினல் செட்டியாரும் வீட்டிலேயேயிருந்தார். இருவரும் விழித்துக்கேட்டுக் கொண்டேயிருந்தார்கள்.

அங்கயற்கண்ணி தன் ஆசைநாயகனை நோக்கி, "என்ன! உங்களைத்தான். இப்போ குடுகுடுப்புக்காரன் சொன்னதைக் கேட்டீர்களா?" என்று கூறினுள்,

"ஆம். கேட்டேன். உனக்கு நல்ல காலம் வருகிறதாகக் கூறினுன்" என்றுர் செட்டியார்.

"எனக்கு இப்படி யாரேனுஞ் சொன்னல் நம்பிக்கையே கிடையாது. ஆனல் இன்றையதினம் குடுகுடுப்புக்காரன் சொன்னதிலிருந்து இடது கண்துடிக்கிறது. என்னமோ ஒருவித சந்தோஷம் தோன்றுகின்றது" என்றுள் அங்கயற்கண்ணி.

"என்னமோ? உனக்கு நல்லகாலம் வருகிறதென்றும், நகை மேல் நகையும், புடவைமேல் புடவையும் வருகிறதென்றுனே எங்கேயிருந்து வருகிறதோ?" என்றார் ஷண்முகஞ் செட்டியார்.

உங்களைத்தவிர, வேறு எங்கிருந்து வரும். நீங்கள் என்னமோ பரிகாசஞ் செய்கிறீர்களே" என்றாள்.

"இல்லை. இல்லை. 'பரிகாசமில்லை. இந்தகுடுகுடுப்பாண்டிக்கு எப்படி தெரிந்தது என்றுதான் சிந்திக்கிறேன்."

அவர்கள் அதிகாலையில் சுடுகாட்டிற்குச் சென்று சுடலைமாடன் முதலிய தெய்வங்களை வணங்கி வருவதால் அவர்கள் அருள் இவர்களுக்குண்டாகி வருங்காலத்தைச் சொல்லுகிறார்கள் என்று கூறினாள் அங்கயற்கண்ணி. இம்மொழிகளைக்கேட்டதும் செட்டியாருக்கு சிறிது மனச்சமாதானமுண்டாயிற்று.

செட்டியார் தனது காலைக்கடனைமுடித்துக்கொண்டு காலைபக்ஷணம் உண்டு காபியருந்தி வெற்றிலைப்பாக்கு கொண்டுவரச் சொல்லிவிட்டுக்கைப்பெட்டியை திறந்து சில நகைகளை யெடுத்து மேசையின் மேல் வைத்தார். அதேசமயம் அங்கயற்கண்ணியும் தாம்பூலத்துடன்வந்து சேர்ந்தாள்.

அங்கயற்கண்ணிக்கு நகைகளைக் கண்டதும் மனம் பூரித்துப் போயிற்று.

ஷ. செ:--அங்கயற்கண்ணே! இந்தா இந்த நகைகளை யெடுத்து அணிந்துக்கொள். இது நேற்றுதான் சென்னையிலிருந்து பிரபல நகை வியாபாரிகளால் பார்ஸ்சலில் வந்து சேர்ந்தது

அங்கயற்கண்ணி:--என்னென்ன நகைகள் வரவழைத்திருக்கிறீர்கள்.

ஷ. செ:--வைரத்தோடு 1 ஜதை: வைரவளையல் 2 ஜதை, வைரமாட்டல் ஒரு ஜதை, வைர திருகுபில்லை யொன்று, வைரமிழைத்த அட்டிகை ஒன்று, வைரமிழைத்த நெக்லேஸ் (Necklace) ஒன்று, வைரமோதிரங்கள் 6, வைரமிழைக்கப்பட்ட ஒட்டியாணம் ஒன்று ஆகபதினான்கு நகைகள் வந்திருக்கின்றன. இஃதல்லாமல் சென்னை

யில் பிரபல ஜவுளி வியாபாரிகளிடமிருந்து பீதாம்பரச் சேலைகளும் பெங்களூர் சேலைகளும் ரவிக்கைகளும் வந்திருக்கின்றன. இன்று முதல் இவைகளை நீ உபயோகித்து வரவேண்டியது.

அங்கயற்கண்ணி:—இதற்கெல்லாம் எவ்வளவு பணம் ஆயிற்று?

ஷ. செ:--ஒருலக்ஷத்து இருபதினாயிரம் ரூபாய் வரையாயிற்று.

அங்கயற்கண்ணி:---போன மாசம் ஒரு ஜதை வைரத்தோடு வேணுமென்று கேட்டபோது இப்போமுடியாது என்றீர்களே.

ஷ. செ:--அந்தசமயம் அப்படியிருந்தது, என்று சொன்னார். இதேசமயம் குடுகுடுப்புகாரனும் நடைக்குவந்துநின்று மீண்டும் தன் குடுகுடுப்பை தட்டினான். செட்டியார் அச்சுதனைக்கூப்பிட்டு "அவனுக்கு ஒருபிடி அரிசிபோடு" என்றார்.

குடுகுடு:---சாமி! நீங்கோ மேலேபோட்டு கிஞ்சிபோன கந்தே கிந்தே குடுத்தாக்கா போதும்" என்று கெஞ்சினான். அந்த சமயம் அங்கயற்கண்ணி ஒரு கிழிந்துபோன குடுத்தினி யொன்று கொண்டு வந்து கொடுத்தாள்.

குடுகுடுப்புக்காரன் அதை வாங்கி பார்த்துக்கொண்டே வீட்டைக்கடந்து போகும் சமயம் "இன்றும் ஒன்று கிடைத்தது. களவாடுகிறவன் எவ்வளவு சாமர்த்தியவானாயினும், துப்பறிபவனுக்கு இடங் கொடாமலிருக்கிறதில்லை" என்று சொல்லிக்கொண்டே போனான்.

ஷண்முகஞ்செட்டியாரும் சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியே புறப்பட்டு போய்விட்டார்.

அங்கயற்கண்ணிக்கு அன்றுண்டான சந்தோஷத்திற்கு அளவு மிதமில்லை.

செட்டியார்சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கயற்கண்ணி ஆடையாபரண மணிந்து அலங்காரஞ் செய்துகொண்டு நிலைக்கண்ணாடியின் முன்னின்று தன் அழகைத்தானே பார்த்துப் பார்த்துப் பூரித்துக் கொண்டிருந்தாள்.

# அத்தியாயம் 6.

## துப்பனும் துப்பனும் சந்திப்பு—நிதானமின்மையினால் நேரிட்ட அவமானம்.

ஷண்முகசெட்டியார் வீட்டில் குடுகுடுப்பாண்டிவந்து குறி சொல்லி மாதம் மூன்ருயிற்று. அவன் குறிசொன்னதைப்பற்றியும் பலரும் பலவிதமாக ஆச்சரியபட்டுக்கொண்டே யிருந்தார்கள். இத்துடன்கூட ஷண்முகம் செட்டியாரைப்பற்றியும், அங்கயற்கண்ணியைப் பற்றியும் பேசாதவர்களே இல்லை. அங்கயற்கண்ணிக்கு வந்த ஐஸ்வரியத்தைப்பற்றியும், பேசுவதாகவேயிருந்தாலும் நாளாகஆக பேச்சு குறையவே செய்தது.

ஒருநாள் இரவு மணிபனிரண்டிருக்கலாம். மதுரைமாநகரில் யாவரும் தங்கள் தங்கள் வீடுகளில் நித்திரைபுரிகின்றனர். இராக்காலம் அதிலும் அமாவாசையானதால் இருட்டு அதிகமாகவேயிருந்தது. இதோடுகூட ஐற்பிசிமாதத்தைப்போல மழைபிசுபிசுவென்று தூறிக்கொண்டேயிருந்தது. இத்தகைய இருட்டு நேரத்தில் இருட்டையும் மழையையும் கவனிக்காமலே ஒரு உருவம் ஆவணிமூலவீதியின்மேல் கோடியிலிருந்து கீழ்க்கோடியை நோக்கி நெடுகப் போய்க்கொண்டிருந்தது. சிறிது பின்னால் பள்ளத்தெருவினின்றும் வரும் சந்துவழியிலேயிருந்து மற்றோர் உருவம் முன்போகும் உருவத்தைத் தொடர்ந்து போய்க்கொண்டேயிருந்தது.

முன்னால் சென்ற உருவமோ ஏதையும் கவனிக்காமலே நேரே போய் கீழ்மாசி வீதியிற் திரும்பி நேராக தெற்கு நோக்கிச்சென்று பிறகு கிழக்கு நோக்கிற்று. நேரே போய்க்கொண்டிருந்த உருவம் ஷண்முக செட்டியார் தொழிற்சாலையிருக்கும் பங்களாவை நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு சிறிது கழித்து தொழிற்சாலையின் பின்புறம் போயிற்று. தொடர்ந்து சென்ற உருவமோ விடாதுதொடர்ந்து போய்க்கொண்டே யிருந்தது.

இதே சமயத்தில் முன்னால்சென்ற உருவம் மதிற்சுவற்றின்மீதே ஏறிக்குதித்து உள்ளே போனதைக்கண்ட பின்னால் சென்ற உருவ

மும் தொடர்ந்து போயிற்று. இவ்விதம் இரண்டு உருவங்களும் உள்ளே போய்க்கொண்டிருக்கும்சமயம் முதற்சென்ற உருவம் ஷண்முக செட்டியாரின் காரியாலயத்தை நோக்கிச்சென்று சன்னலை மெள்ளத் திறந்து விட்டு உள்ளே சென்றதும், பின்னால் சென்ற உருவமும் அதைப்பார்த்துக்கொண்டே வெளிப்புறம் நின்றிருந்தது.

முதற்சென்ற உருவம் உள்ளேசென்றதும் தன்னிடமிருந்த ராந்தலைத்திறந்து சிறிய வெளிச்சமுண்டாகிக்கொண்டு இரும்பு பெட்டியையணுகியது. அதேசமயம் வெளியிலிருந்த உருவம் உள்ளே யிருந்த உருவத்தைப் பார்த்துவிட்டு, "ராஜரத்தினம்! உன்போலும் துப்பர்கள் பலர் இருந்தால் நம் நாடு வெகு சீக்கிரம் பாழாகிவிடும் என்பதில் தடையேயில்லை" என்று மனதிற்குள்ளேயே சொல்லிக் கொண்டது.

இந்த உருவம் பிரக்யாதிபெற்ற துப்பறியும் நிபுணனாகிய ராமலிங்கமென்று எவரும் தெரிந்துகொள்ளலாம்.

இராஜரத்தினம் உள்ளே சென்றது முதல் சும்மாயிராமல் தான் நாடிவந்த காரியத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். அதாவது தன்னிடமிருந்த சாவிக்கொத்திலிருந்த சாவிகள் ஒவ்வொன்றாய்ப் போட்டு திறந்துபார்த்தான். கடைசியாக ஒரே ஒரு சாவியினால் திறந்துகொண்டது. பெட்டிதிறந்துகொண்டதும், மெதுவாய் ஒவ்வொருபாகமும் சோதித்துப்பாாத்தான். அன்று கண்டநகைகளில் ஒன்றேனும் காணவில்லை. ராஜரத்தினத்திற்கு மனமுடைந்துபோய் விட்டது. சிறிது அயர்ந்து நின்றுவிட்டான்.

ெளியிலிருந்த ராமலிங்கம் தன்கைத்துப்பாக்கியைக்கையிலெடுத்துக்கொண்டு ஜாக்கிரதையாய் ராஜரத்தினத்தின் செயல்களைக் கவனித்துக்கொண்டும், வேறுயாவரேனும் வந்து விடுகிறார்களோவென்று நாற்புறமும் சுற்றிப்பார்த்துக்கொண்டேயிருந்தான்.

ராஜரத்தினம் சிறிது நிதானித்து மீண்டும் இரும்புபெட்டியின் அடிப்பாகத்து அறையை யிழுத்துபார்த்தான் அச்சமயம் அதில் அநேககடிதங்கள் காணப்பட்டன. அவைகளை ஒவ்வொன்றாய் பிரித்துப்பார்த்துவிட்டு அவற்றில் ஐந்துகடிதங்களைஉறையுடன் எடுத்து

ஜேப்பியில் போட்டுக்கொண்டு மெள்ள ஜன்னலை நோக்கினான். வெளியி லிருந்த ராமலிங்கம் சிறிது பதுங்கினான்.

ராஜரத்தினம் வெளியில்வந்து ஜன்னலை மூடிவிட்டு நேரே மதிற் சுவற்றைநோக்கி போனான். ராமலிங்கமும் மெள்ள அவன் பின்னா லேயே மறைந்து கொண்டே போய் அவன்சுவற்றின்மீது ஏறி மறு புறம் இறங்கும் சமயம் குப்புறபிடித்து தள்ளிவிட்டான். ராஜரத்தி னம் கீழேவிழுந்ததும் மூர்ச்சையாய்ப் போய்விட்டான். உடனே ராமலிங்கம் அந்தப்பக்கத்திற்கு மதிலினின்றும் குதித்துராஜரத்தினத் தின் அருகில் சென்று அவனது சட்டப்பையிலிருந்த ஐந்து கடிதங் களையும் எடுத்துக்கொண்டு தான் ஒருமரதத்தின் மறைவில் உட் கார்ந்து இவனையே உற்று நோக்கிக்கொண்டிருந்தான். அந்தசமயம் ராசரத்தினம் எழுந்து தன்னுடைம்பெல்லாம் சேரானதைப் பார்த்து அவைகளையுதறித் துடைத்துக்கொண்டு நேரே தான் வந்த வழியே நடக்கலானான். இப்படி நடந்துபோகும்சமயம் முன்செல்லும் ராச ரத்தினம் பல சிக்கலான சந்துகளையும் போக்கிரிகள் வசிக்கும்படியா ன இடங்களையும் நோக்கிச்சென்றுகொண்டிருந்தான். பின்னால்செல் லும் ராமலிங்கம் தனக்குள் "இராசரத்தினம் எங்கே செல்லுகிறான் முதலில் ஷண்முகஞ்செட்டியார் அறைக்குள் ஏன் பிரவேசித்தான். செட்டியாருக்கும் இவனுக்கும் அன்றையதினம் என்னநடந்தது? பெட்டியை திறந்து பார்த்ததும் ஏன் மனமுடைந்துபோனான். இவ் விருவர்களுக்குள்ளிருக்கும் அந்தரங்கம் என்னவென்றுமட்டும் விள ங்கவில்லை. நிற்க தற்சமயம் வேறு யாரையோ பார்க்கப்போகிறான். தவிர, தான் எடுத்த காகிதங்களைப்பற்றியும் சந்தேகமிருக்கின்றது. இன்னும் எங்கே போகின்றானென்பதைபற்றியும் கவனித்துக்கொண் டு நாளையதினம்முதல் இவன்மீதும் மோசூல் வைக்கவேண்டியதோடு சண்முகஞ் செட்டியாருக்கும் இவனுக்கும் ஏதோ மர்மம் இருக்கிற தாகதெரிகிறது. நாம் போகவேண்டியதான இரத்னமாலைக் கொலை யைக்கவனிக்க வேண்டிய காரியத்தை நிறுத்திக்கொண்டு இவனது விஷயத்தைக் கவனித்துப்பார்ப்போம். இவனும் ரத்தினமாலைகொலை கேசில் வேலைசெய்வதாகச் சொல்லித்திரிகிறானே. அதையும் கவனிப் போம். இரத்னமாலையோ மிகவும் சுகத்தில் கொடைக்கானலிலிருக்கி றாள். சண்முகஞ்செட்டியாரும் மற்றவர்களும் இறந்துபோனதாகவே எண்ணியிருக்கின்றனர். சென்னையில் லக்ஷிமியும் சுகமேயிருக்கின்

ளுள். இதுவும் செட்டியாருக்கு தெரியாது. ஆனால் ல்க்ஷமி விஷயத்தில் கொஞ்சம் சந்தேகமிருக்கிறது இருக்கட்டும். சவுரிமுத்து யார் என்பதையும் தெரிந்துக்கொண்டோம். ரகுபதி யார் என்பது மட்டும் விளங்கவில்லை. போகப்போக விளங்கும். பாரப்போம்" என்று சொல்லிக்கொண்டே ராஜரத்தினத்தை பின் தொடர்ந்தான். ராஜரத்தினம் சந்து சந்தாக நுழைந்து ஒரு வீட்டு வாசலின்முன் சென்று சுற்றுமுற்றும் யாரேனும் நடமாடுகிறார்களாவென்றுபார்த்து விட்டு மெள்ள கதவை தட்டவே, உள்ளேயிருந்து "யாரது?" என்ற சத்தம் பிறந்ததும் "நான் தான் ரகுபதி" என்றான் ராஜரத்தினம். ராமலிங்கத்திற்கு ஆச்சரியமாயிருந்தது. ரகுபதியென்றதும் கதவு திறக்கப்பட்டதும் உள்ளேசென்று கதவைத்தாளிட்டுக்கொண்டு விட்டார்கள். சிறிது நேரம் வரையில் யாதொருசந்தடியும் காணவில்லை. இந்த சம்பவங்களைக்கண்ட ராமலிங்கத்திற்கு மிக்க ஆச்சரியமும் திகிலும் ஏற்பட்டது. ராசரத்தினமே ரகுபதியென்பவன். சவுரிமுத்துவே சண்முகஞ்செட்டி. இவன் இதற்குள் ஏன் சென்றான்? இதில் யார் வசிக்கின்றார்கள் இவனுக்கும் அவர்களுக்கும் என்ன சம்பந்தம் என்று எண்ணிக்கொண்டே இதை முடிவுவரை பார்க்கவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டான்.

ராமலிங்கம் சமயத்திற்கேற்ற வேஷம் போடுவதில் நிபுணன். இவனை ஒருநாளைக்கு நூறுமுறை நூறுவிதமாக பார்க்கலாம். எந்த வேஷத்திலிருந்தாலும் அதற்கேற்ற நடை நொடி பாவனைகளை மறக்கவேமாட்டான். இவ்வளவு சாமார்த்தியமுடையவனாதலால் அச்சமயம் தான் ஒரு பண்டார வேடத்திலிருந்ததனாலும், தான் அப்பொழுதே யனுத்துவந்தவன்போல் ராசரத்தினம் சென்றவீட்டு திண்ணையின் மீது சன்னல் புறம் போய்படுத்தான். அதேசமயம் சவுரிமுத்து நீ காலஹரணம் செய்வதால் நம்மிருவருக்கும் ஆபத்துண்டாகும் உடனே என்கணக்கை பைசல்செய்துவிடு" என்று கோபத்துடன் கூறினான் ரகுபதி.

சீ! சீ! போ மூண்டமே! நீ கேட்டபோதெல்லாம் பணம் கொடுக்க இங்கென்ன கொட்டியா வைத்திருக்கிறது? எப்போ பார்த்தாலும் கணக்கு கணக்கு என்கிறாயே. உனக்கென்னமோ இன்றைக்கு அஷ்டமத்து சனி போலிருக்கிறது, போ, போ, என்று சவுரிமுத்து கூறினான்.

"ஏன்? இனி உன்னை ஒன்றும் செய்ய முடியாதென்று எண்ணியப்படிக் கூறுகின்றனேயோ?" என்று கூறினன்.

"உன்னால் ஆவதைச் செய்துகொள்ளலாம். அதைப்பற்றி யெனக்குக் கவலேயேயில்லே. நடவெளியில்" என்று சொல்லிக்கொண்டே யவனை வெளியில் தள்ளி கதவு தாளிட்டுக்கொண்டான்.

ராசரத்தினம் மனவியாகூலத்துடன் மெல்லநடந்துக்கொண்டே "இந்தப்பபலேத் துலேக்கும் வழி யென்கையிலிருக்கிறது. இவனை ஒரு கைபார்த்துக்கொள்ளுகிறேன்" என்று மனதில் கூறிக்கொண்டே நடப்பதைக்கண்ட ராமலிங்கம் இச்சமயத்தில் தான் இவனைச் சந்திக்கவேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டே குடிவெறியனைப் போல தள்ளாடித்தள்ளாடி ராசரத்தினத்தின்மேல் விழுந்தான்.

ராசரத்தினம் அச்சமயம் மனமுடைந்து போயிருந்தமையினல் விலகி விலகிப் போனன் என்ருலும் குடியன் விலகுவதாயில்லே. அதோடுகூட பேஷ்' சவுரிமுத்து! பாத்தியா மோசம் பண்ணிட்டான் ரகுபதியானுக்க அப்படி செய்வானு? டேய்? நீ ஆர்ரா?" என்று சொல்லிக்கொண்டே காரிக்காரி உமிழ்வதுபோல் ராசரத்தினத்தின் மீது உமிழ்ந்தான்.

ராசரத்தினத்திற்கு கோபம் பொங்கி வழிந்தது என்ருலும், சிறிது நிதானித்து இவன் யார் என்றறியவேண்டித் தன்கைராந்தலே திருப்பி வெளிச்சத்தால் குடியன் முகத்தை நோக்கினன்.

அதேசமயத்தில் ராமலிங்கமும் தன் செய்கையை சாதிக்கவேண்டியதென்னும் நோக்கத்துடன் நடித்தலும், ராசரத்தினம் வெளிச்சம் காட்டினவுடன் குடியன் ராசரத்தினமா நீ என்று கேட்டான்.

நான் யாரானு லென்ன?

ஏன் என்னை வழிமறித்தாய்?

ரகுபதி என்று பார்த்தேன் அல்ல ராசரத்தினம். துப்பாளி.

உடனே ராசரத்தினத்திற்கு ஒரு விதத்தில் உண்டாயிற்று. இவன்யாராயிருக்கலாம்? மாறுவேடத்திலும் நம்மையறிந்து கொண்

டானே ? ஒரு சமயம் ராமலிங்கமாயிருக்குமா ? ஆனல் இவனே இப்பொழுதே ஒழித்துவிடவேண்டும் என்று எண்ணிக்கொண்டே மெல்ல தன் கைதுப்பாக்கியை யெடுத்து ராமலிங்கத்தின் முகத்திற்குநேரே நீட்டி " நீ யாராயிருந்தாலும் சரி. இப்போதே உனக்கு மரணம் சம்பவித்திருக்கிறது. ஒரு அடிகூட முன்னல் எடுத்து வைக்கக் கூடாது. நான் கேட்பவைகளுக்கு பதில் உடனுக்குடன் கூறிவிடு. எட்ட நில்" என்று சொல்லிக்கொண்டே தன் கைத்துப்பாக்கியை யவன் முகத்துக்கு நேரே நீட்டினன்.

சிங்கத்தின் வலிமையைப்போன்ற தேகதாருட்யவானன நமது ராமலிங்கம் இவன் சொல்வதை கவனியாத குடியனைப்போலவே யபிநயித்துக்கொண்டே யவனது துப்பாக்கியைத் தட்டிவிட்டான். அது ராசரத்தினத்தின் கையிலிருந்து விடுபட்டதும் ஆகாயத்தை நோக்கிச்சென்று மீண்டும் பூமியைநோக்கி விழுந்ததும் அதினின்றும் சப்தமுண்டாயிற்று. பார்த்தான் ராமலிங்கம். இனி இங்கிருந்தால் மோசம். போலீசார்வந்து விடுவார்கள். விஷயம் கெட்டுப் போகுமென்றெண்ணி யடுத்தாப்போலுள்ள சந்துவழியே போய்விட்டான்.

ராசரத்தினமோ ஒன்றும் தோற்ருமல் 'விழித்துக்கொண்டிருக்கையில் போலீஸ்காரர்களும் வேறு சனங்களும் வந்து நின்றிருக்கிறவனை முன்பின் பாராமல் அடித்துவிட்டனர். இதற்குள் ராந்தல் வெளிச்சம் வர எல்லாரும் சற்று விலகவே போலீஸ் எட்கான்ஸ்டேபில் பார்த்து நீ யார் ? என்று கேட்டார்.

அதற்குள் ராசரத்தினம் மறுமொழியொன்றும் சொல்லாமல் தன் சட்டைப்பைக்குள்ளிருந்த ஒரு தங்கபதக்கத்தைக்காட்டினன்.

ஓ! ஹோ ! துப்பறிபவரா ? துப்பாக்கி சப்தம் கேட்டதே ! என்ன விசேஷம் என்ருன்.

" தவறுதலாய் விட்டது. அதன் பயன் அவமானமேயன்றி வேறில்லை. இதையும் சும்மாவிடுவதில்லை " என்று சொல்லிக்கொண்டே போய்விட்டான்.



# அத்தியாயம்-7

## சவுரிமுத்தும் ரகுபதியும்.

மேற்கண்ட சம்பவங்கள் நடந்து நாள் சில கடந்து போயிற்று. கிணற்றில் கல்போட்டது போல் இருக்கிறது.

கோடைக்கானலில் பகல் பன்னிரண்டுமணி இருக்கும். அந்த நேரத்தில் ஓர் வைத்தியர் வசந்த பங்களாவுக்குள் நுழைந்தார்.

இரத்தினமாலேயும் அவளது அத்தையும் ஆகிய இருவரும் இரண்டு ஆசனங்களில் அமர்ந்து உண்டியுண்ணும் சமயம் வைத்தியரைப் பார்த்ததும் இரத்தினமாலே எழுந்தாள். அதற்குள் அவள் அத்தை அபிராமம்மாள் தலையை நிமிர்ந்து வைத்தியர் என்று தெரிந்து கொண்டு அவரிடம் பேச எழுந்து வந்தவள், சிறிது துரிதப்படவே கால் இடறிற்று. அச்சமயம் நமது இரத்னமாலே அத்தையைதாங்கிஞள். டாக்டரும் பிடித்துக்கொண்டார். பிறகு சிறிது சமாளித்து அபிராமியம்மாள் ஆசனத்தமர்ந்து டாக்டரையும் அமரச்செய்து க்ஷேமங்களை விசாரித்தாள். டாக்டருக்கு நோக்கமெல்லாம் இரத்தினமாலேயின் மீதேயிருந்தது. இரத்னமாலேயும் தனதுபார்வையை டாக்டர்மீதேசெலுத்தியிருந்தாள். இவ்விதமிருக்க அபிராமியம்மாளின்வார்த்தைக்குப் பதிலளிக்கச்சிறிது தாம்தப்பட்டதெனினும் உடனுக்குடனே சரியான பதில் அளித்தான்.

சிறிதுநேரம்கழித்து டாக்டர் இரத்னமாலேயை நோக்கி " இப்பொழுது தேகம் சவுக்கியம் தானே ? " என்று கேட்டபின்.

" ஆம் ? இப்பொழுது தேகம் சௌக்கியம் தான்: எனக்கு ஊருக்குபோகப்பிரியம். ஆனல் என் தகப்பனர் வரக்கூடாதென்று உத்தரம் எழுதி விடுகிருர். இன்னும் எத்தனேகாலம் இந்த ஊரிலிருப்பதென்று எனக்கு கஷ்டம் தோற்றுகிறது " மிருதுவான மொழிகளால் கூறிஞள் இரத்னமாலே.

டாக்டர்:— " அம்மா! சீக்கிரமேபோய்விடலாம். இனி அதிக நாள் தாமதிக்கவேண்டியதில்லே " என்று கூறிஞர் டாக்டர்.

இரத்னமாலை:—இன்னும் எத்தனை நாள் செல்லும்

டாக்டர்:—அடுத்த வாரத்தின் ஆரம்பமே ஊருக்கு வரவேண்டியதுதான். எனக்கு சிலவிஷயம் தெரியவேண்டும். அதை இப்பொழுது கூறமுடியுமா?

இரத்னமாலை:—ஆ! ஹா!! கூறுகிறேன். என்ன கூறவேண்டும்?

டாக்டர்:—நீ அன்றையதினம் கண்காட்சிக்கு போயிருந்தாயல்லவா? அந்த விஷயம் உன் ஞாபகத்திலிருக்கிறவரை கூறு.

இரத்னமாலை:—ஆ! அதுவா? எனக்கு பயமாயிருக்கிறது. நினைக்க நினைக்க பயமாகவே யிருக்கிறது.

டாக்டர்:—அம்மா! பயப்படாதே. இனி எவ்விதமான ஆபத்தும் ஏற்படாது.

இரத்னமாலை:—நான் அன்றையதினம் மாலை 5-மணிசுமாருக்கு வீட்டினின்றும் அலங்கரித்துக்கொண்டு புறப்பட்டேன். சரியாய் 5-30 மணிக்கு என் அறிமுகமானவளான அங்கயற்கண்ணியை வழியில் சந்தித்து என்வண்டியிலேயே ஏறிக்கொள்ளச் சொல்லி அழைத்துக்கொண்டு நாங்களிருவரும் நேரே விக்டோரியா மிமோரியல்ஹாலுக்குச்சென்றோம். அங்குசிறிது நேரம் அத்தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்து 6-மணிசுமாருக்கு முதல்வகுப்பு டிக்கட்பெற்று இருவரும் உட்காருமிடங்களுக்குச் சென்றோம். நான் நாடகத்திற்குப் போனாலும் மத்தியபாகத்திலுள்ள ஆசனங்களில்தான் அமருவது வழக்கம். அங்கையற்கண்ணியனுதத்தடுத்து என்னை புருஷாளுக்கு அடுத்தாப்போல் கிராதிபோட்டிருக்கிறதே யவ்விடத்தில் அமரும்படியாகக் கூறினாள். அவளும் என்னருகிலேயே அமர்ந்தாள். நாங்கள் உள்சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் காட்சியாரம்பிக்கப்பட்டது. காட்சியில் பார்வையையும் மனதையும் செலுத்திக் கொண்டிருக்கும் சமயம் என்னருகிலிருக்கும் அங்கையற்கண்ணியின் கணவனான ஷண்முகஞ்செட்டியார்வந்து கிராதியிடம் அமர்ந்து எதையோ ஒரு வஸ்திரத்தையெடுத்து அவளிடம் கொடுக்கப்போனார். இவ்வளவேயெனக்குத்தெரியும். பிறகு நான் வீட்டிலிருக்கவும், ரெயிலிலிருக்கவும்

என்து வசந்தபங்களாவிலிருக்கவுமானேன். நாளதுவரைவேறு விசேஷம் ஒன்றுமே தெரியாது என்று கூறிவிட்டாள்.

டாக்டர்:-சரி இன்னும் நான்கு நாட்களில் உன்தகப்பனுரால் உன்னைமதுரைக்குவரவழைத்துக்கொள்ளுகிறேன். அது வரையும் நீ இங்கேயேபத்திரமாய் இருக்கவேண்டும். ஆனால் ஆபத்து ஒன்று மேயில்லை. என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்.

மறுநாள் காலை 10 மணிசுமாருக்கு ராமலிங்கம் தனது வீட்டில் அமர்ந்து அநேக வஸ்துக்களை யெடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தான். அதில் கைகுட்டை ஒன்றிருந்தது. அதையெடுத்து அதின் நான்குமூலைகளையும் சோதிக்கையில் ஒரு மூலையில் 413 K என்று லக்கமிட்டிருந்தது. ஒரு கிழிந்தசொக்காயையெடுத்து அதின்கழுத்தண்டைபார்த்தான். அதிலும் 413 K என்று குறித்திருந்தது. உடனே ஒரு தந்திபாரத்தை எடுத்து அதில் கீழ்கண்டவாறு எழுதி சென்னை கமிஷனருக்கு ஒரு தந்தி கொடுத்தான்.

“போலீஷ் கமிஷனர், சென்னை.

தாங்கள் சென்னையிலுள்ள கமலா வாஷிங் கம்பனிக்கு சென்று 413 K என்ற பில் நெம்பர் பேர்வழியார் என்று விபரம் அறிவிக்கவும். அவசரம்.

ராமலிங்கம்,

துப்பன்”

ஒருமணி நேரத்துக்குள் சென்னையிலிருந்து “சவுரிமுத்து” என்ற பதில் வந்துவிட்டது.

ராமலிங்கம் 5 கடித உரைகளை யெடுத்துபிரித்து பார்த்துவிட்டு சரி. சரி. இனி நாம் தாமதிக்கப்படாது “என்று சொல்லிக்கொண்டே தன் ஆசனத்தை விட்டெழுந்து வெளியேபுறப்பட்டுப்போனான்.

ராமலிங்கம் வயோதிகனைப்போல் வீட்டைவிட்டு புறப்பட்டு முனிச்சாலைவழியேபோய் ஷண்முகசெட்டியார் தொழிற்சாலைக்குள் புகுந்தான். அச்சமயம் நமது ராஜாரத்தினமும், ஷண்முகஞ்செட்டியாரும் இருக்கக்கண்டானேனும், ஒரு விதத்திலும் மாறுதலடையாமல் செட்டியாரிடம் ஒருகடித உரையை நீட்டினான்.

அவ்வுரையை பெற்றுக்கொண்ட செட்டியார் அதைப்பிரித்துப் பார்த்து விட்டு, "இதில்கண்ட பேர்வழிகள் என் தொழிற்சாலையில் ஒருவருமில்லை" என்று கம்பீரமாய்க் கூறினர்.

இதேசமயத்தில் ஐந்தாறு குதிரைகளின் கால்நடைச்சப்தம் வெளியில் கேட்டது. செட்டியாரும், ராஜரத்தினமும்திகைத்தனர். அதேசமயம் கலெக்டர், போலீஸ்சூப்பிரின்டெண்டெண்ட்,போலீஸ் இன்ஸ்பெக்டர் அநேக கான்ஸ்டேபில்களுடன் தோன்றினர்.

ஷண்முகஞ்செட்டியாரும் ராஜரத்தினமும் ஒருவரை யொருவர் மாறிமாறிப்பார்த்துவிட்டு முன்னால் நின்றவனை பார்த்தனர்.

முன்னால் நின்றிருந்த வயோதிகனைக்காணவில்லை. ஆனால் வாலிபன் ஒருவன் முன்னிற்கின்றான். முன்னொருமுறை பார்த்த ஞாபகம் வந்து விட்டது. விலவிலத்துப்போனார். செட்டியாரும் ராஜரத்தினமும் அசையவே யில்லை.

இதற்குள் போலீசார் செட்டியாரையும் ராஜரத்தினத்தையும், கைது செய்து ஜெயிலுக்குக் கொண்டுபோயினர். மற்றவர்கள் தொழிற்சாலையிலுள்ள வேலைக்காரர்களை யெல்லாம் வெளியனுப்பிவிட்டு பூட்டிச் சீல்செய்துவிட்டு போலீசார் காவல்புரிந்துகொண்டிருந்தனர்.

மதுரையில் எங்குபார்த்தாலும் ஷண்முகஞ்செட்டியாரும் ராஜரத்தினமும் பிடிப்பட்ட விஷயமே பிரதியிடமும். புகார் கிளம்பிக் கொண்டே யிருக்கின்றன.



# அத்தியாயம்—8.

## விசாரணையும் விவகாரவிளக்கமும்.

மதுரையில் திருமலைநாயகர் அரண்மனையின் முன்புறம் ஜனங்கள் கூட்டம் கூட்டமாகக் கூடியிருக்கின்றனர். ஒவ்வொருவரும் செட்டியார் ராஜரத்தினம் இவர்கள் வார்த்தைகளையே பேசிக்கொண்டிருக்கின்றனர். கூட்டத்திற்கோ கணக்கேயில்லை. எங்குபார்த்தா

லும் ஜனங்களுக்குக்கணக்கேயில்லை. இந்தசந்தர்ப்பத்தில் காபிஹோடல்காரர்களுக்கும் வெற்றிலைப்பாக்கு கடைக்காரர்களுக்கும் நல்ல வியாபாரமும், வேனிற்காலமானதால் சோடா, லெமனெட் முதலியவைகள் அதிகமாக விற்பனையாகிக் கொண்டிருந்தது.

மணிபதினொன்றடித்தது. ஜில்லாகலெக்டர் வண்டிவருவதற்குக்கூட வழியே யில்லை. இவ்வளவு கூட்டத்தினிடையில் கலெக்டர் குதிரையுடன் சிரமத்தோடு உள் சென்றார். சரியாய் பதினொருமணிக்குவரவேண்டிய கலெக்டர் 11½—மணிக்குத்தான் ஆசனத்தில் அமர்ந்தார்.

கலெக்டர் ஆசனத்தமர்ந்ததும், கக்ஷிக்காரர்களை விசாரிக்கும்படியான கட்டு கலெக்டர்முன் வைக்கப்பட்டது.

குற்றவாளிகளான ஷண்முகசெட்டியாரும், ராஜரத்தினமும் கொண்டுவந்து பாரின்மேல் நிறுத்தப்படடார்கள்.

கலெக்டர்:--தன் துவிபாஷியைநோக்கி, இவர்கள், பேர் ஊர் முதலியவைகளை விசாரிக்கும்படி பிராசிகூட்டருக்குச் சொல்லச்சொல்லவே யவர் கேட்கலானார்.

பிராசிகூட்டர்:—செட்டியாரைநோக்கி உன்பேரென்ன ?

டிசெட்டியார்:—ஷண்முகம் செட்டியார்

பிராசிகூடர்:—உன் தகப்பன் பெயரென்ன ?

செட்டியார்:--சோமசுந்தரம் செட்டியார்.

பிராசிகூடர்:--இப்போது வயது என்ன ?

செட்டியார்:--நாற்பது.

பிராசிகூடர்:—என்ன தொழில் ?

செட்டியார்—-மெடல் பாக்டரியின் சொந்தக்காரன்.

பிராசிகூடர்:--[ராஜரத்தினத்தைநோக்கி] உன்பெயரென்ன?

ராஜரத்தினம்:---ராஜரத்தினம். என் தகப்பன்பெயர் மகாதேவ பிள்ளை. எனக்குவயது 35 என் தொழில் துப்பறிவது "

கலெக்டர் மீண்டும் குற்றவாளிகளை நோக்கி உங்களுக்குமாறு பெயர் உண்டா ? என்று கேட்டதும் பதில் ஏற்படவேயில்லை. கலெக்டர் இவர்களைக்குற்றவாளியாக்கினதற்கு காரணமென்ன ? என்று பிராசிகூட்டரைகேட்டார்.

பிராசிகூடர்:---ஷண்முகஞ்செட்டியும், ராஜரத்தினமும் சென்னையில் சவுரிமூத்து, ரகுபதி யென்ற மாறுபெயருடன் லக்ஷ்மியென்ற பெரிய தனவந்தனின் புத்திரியைக் கொலைசெய்து அவள்மீது இருந்த சுமார் 2,00000. ரூபாய்மதிப்புள்ள நகைகளைக் களவாடியதும், மதுரையில் ஷண்முகம்செட்டியார் தனிமையில் பிரபுசோமசுந்தரம் அவர்களின் புத்திரியைக் கொலை புரிந்ததுமாகும்" என்று கூறினர்.

கலெக்டர்:--செட்டியாரே உமது எதிர்வாதம்என்ன? "என்றார்

செட்டியார்:—நான் பெரிய தொழிற்சாலையைவைத்து நடத்துந் திறமையுடையவன். சீமையிலிருந்தும் மற்ற அந்நியநாடுகளிலிருந்தும் எவ்வளவோ கணக்குவழக்கற்ற லாவாதேவிகளைச் செய்கிறேன். இப்படியிருக்க நான் பேரைமாற்றிக்கொலைசெய்ததாக கூறுவது மிகவும் பொறுத்தமற்றவார்த்தை. அதிலும் பெரிய வியாபாரியாகிய நான் கேவலம் கொலைசெய்தேனென்று கூறுவது அபவாதம்.

கலெக்டர் பிராசிகூடரை நோக்கி சாக்ஷிகள் இருக்கிறதா ? என்று கேட்டார். இதே சந்தர்ப்பத்தில் கோர்ட்டின் உள்புறத்திலிருந்து இரண்டுமங்கைகள் வெளிப்பட்டனர். இக்காக்ஷியைபார்த்ததும் செட்டியார் ஹிருதயம் வெடித்துப்போய் மூக்கிலும் வாயிலும் இரத்தம் வந்தது. கீழேவிழுந்துவிட்டார். அவரை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகும் வழியிலேயே யிறந்துவிட்டார். ராஜரத்தினம் இச்சம்பவம் கண்டதும் மனம் புழுங்கிப்போனன். ஆனல் அவனுக்குப் பிராணாபத்தான மூர்ச்சைமட்டும் உண்டாயிற்று. அவனையும் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டது.

ஆஸ்பத்திரியில் செட்டியார் இறந்த 5-ம் நாளில் இராஜரத்தினமும் மரித்துப்போனன்.

மதுரையில் இதுவே பேச்சு எங்கும் பரந்தது. கோர்ட்டும் கலைந்து பிரஜைகள் திரள் திரளாய்க் கூடியவர்கள் வீட்டுக்குப்போயினர்.

குற்றவாளிகளிருவரும் மரித்துப்போன ஒரு வாரத்திற்குப்பிறகு ஒருநாள்மாலை 2-மணி சுமாருக்கு பிரபு சோமசுந்தரம், ஜில்லா அதிகாரி, போலீஸ் சூப்பிரின்டெண்டெண்ட் இன்னும் உள்ள பெரிய மனிதர்கள்திரண்டு மதுரையில் பிரபுசோமசுந்தரம் அவர்களின் மாடிமீதுள்ள ஹாலில் அமர்ந்திருந்தனர். அச்சமயம் ராமலிங்கம் சென்ருன். ஸ்திரீகளுக்கும் பிரத்தியேகமான இடம் அமைக்கப்பட்டிருந்ததில் லக்ஷ்மி, இரத்தினமாலை, அபிராமியம்மாள் யாவரும் கூடியிருந்தார்கள். அச்சமயம் ராமலிங்கத்தைநோக்கி "ராமலிங்கம் இரண்டு கொலைகளின் இரகஸியங்களையும் அதைகண்டுபிடித்தவிபரமும் விவரமாகக் கூறு" என்று கேட்டார்.

ராமலிங்கம்:—சென்னையில் நான் டிடெக்டிவ் வேலை பயிலும்போது மண்ணடியில்போக்கிரிகள் கூடும்படியானவிடத்தில் ஒருசிலம்பக்கூடமிருந்தது. அதின்மீது எனக்கு எப்போதும் சிறிது கண்ணோட்டமுண்டு. நான் அச்சமயம் ஒரு சைனைகாரனைப்போல வேஷம் போட்டுக் கொண்டு சிறுபிள்ளைகளும் பெரியோர்களும் கண்டு அதிசயிக்கக்கூடிய கடிதப்புஷ்பங்களைச்செய்து விற்கிறதுண்டு. என்னை சைனைகாரனென்றறிந்து கொண்ட போக்கிரிகள் என்னிடத்தில் மெள்ள மெள்ள பேச்சுக்கு இடங்கொடுத்தனர். நான் அவர்கள் உறவைப் பெற்றுக்கொண்டு அவர்களோடு சிலசமயங்களில் சிலம்பக் கூடத்திற்குப்போவதும்வருவதுமாயிருந்தேன். இப்படியிருக்கும் நாளில் ஓர் நாள் அதிக விசாரமுடையவன் போல் நடித்தேன். அந்த சிலம்பக்கூடத்திற்கு முதன்மையாளனை சவுரிமுத்து என்பவனிருந்தான். அவன் என் மீது பக்ஷமுடையவனைக் காணப்பட்டான். அவன் என்னைநோக்கி ஏன்விசாரப்படுகின்றனை என்ற கேட்டபோது நான் "இதுவரையும் இருந்த இடத்திற்கு அதிகாரியானவன் என்னை வீடுகாலிவசய்யும்படி சொல்லி என் சாமான்களுடன் தூத்தி விட்டான். இனியிருக்க இடமில்லையே யென்று மிகவும் விசனமாயிருக்கிறேன்" என்றேன். சவுரிமுத்து சிறிதுநேரம் யோசித்து, "நீ யிங்கேயே ஒரு புறமாகயிருந்து கொண்டு உன் வேலையைச் செய்து கொண்டிருக்கலாம்" என்ருன். அதற்கு நான் சம்மதித்துக் கொண்டிருந்து வேலையை கவனிப்பதுபோல அபிநயித்திருந்தேன். அந்த இடத்தில் ரகுபதி யென்பவன் அடிக்கடி வருவான். அவனை யெனக்கு ராஜரத்தினம் என்று தெரியும். ஆனல் அவன் என்னைத்

தெரிந்துகொள்ளக் கூடவில்லை, இப்படி யிருக்கும்போது சிலம்பக் கூடத்தில் ஒருவராவது சிலம்பவித்தை பயில்வதாக தெரியவில்லை. இரவில்மட்டும் கூட்டமாகப்பலர் சேர்வதுவழக்கம். அச்சமயம் நான் அபினி தின்பதைப்போல அபிநயித்து அந்தமயக்கத்தில் உறங்குவது போல பாசாங்குசெய்து படுத்துக்கொண்டு அரைக்கண் பார்வையை அவர்களின்மீதுசெலுத்தி யவர்கள் விஷயங்களை கவனித்துவந்தேன். இரவு பதினொருமணிக்குமேல் சவுரிமுத்துவும் ரகுபதியும் சந்தித்து அநேக நகைகளை யெடுப்பதும் அதைத்திருப்பிப் பார்ப்பதும், மீண்டும் வைப்பதும், வாரம் ஒருமுறை சவுரிமுத்துவும் ரகுபதியும் வெளியூர்களுக்குப்போவதும் நகைகளைவிற்பதுமாகயிருந்துவந்தனர். இவ்விதம்செய்ததில் ஏராளமான பணம் அவர்களுக்குச் சேர்ந்திருந்தது. இதைக்கொண்டு சவுரிமுத்து மதுரைக்குச்சென்று மெடல் பாக்டரி என்னும் தொழிற்சாலை ஏற்படுத்துவதாகவும் அதில் வரும் இலாபத்தை இருவரும் பங்கிட்டுக் கொள்வதாகவும் பேசிமுடித்துக்கொண்டு சவுரிமுத்து மதுரைக்குவந்து ஷண்முகஞ்செட்டியார் என்றபேர் வகித்து பெரிய தொழிற்சாலை ஸ்தாபிக்க அநேக சாமான்கள் சென்னையிலிருந்து வரவழைத்து வேலை தொடங்கினர், இவ்விதம் வேலை தொடங்கி நடந்து வரும் சமயம் சென்னையிலிருக்கும் போக்கிரிகளில் மண்ணடி செக்ஷனைசேர்ந்தவர்கள் அதிகமாகக் கூடுவது நின்றுபோயிற்று என்ருலும், ரகுபதிமட்டும் அடிக்கடிவந்து கொண்டிருப்பான். இந்தரகுபதியென்பவன் பகல் காலங்களில் ரத்தினம் என்ற பெயருடன் விளங்கப்பார்த்த நான் இவன் இராக்காலங்களில்வரும்போது ரகுபதியென்றபெயருடன் வருவதைக்கண்டு ஆச்சரியம் கொள்ளாதிருக்கவில்லை. ஆனல் இவர்கள்மீது எனக்கு இருந்தசந்தேகம் வளர ஆரம்பித்ததாயினும், இவர்கள் திருட்டுத் தொழில் செய்பவர்களுக்கு மேஸ்திரிகளென்பது மட்டும் தெரிந்து கொண்டபின் இவர்களையதிகமாகக்கவனிக்க வேண்டுமென்று கருதியிருந்தேன். இவ்விதம் நடந்து வரும் நாளில் டிசம்பர்மீ 23உ காலை வண்டிக்கு சவுரிமுத்து வருவதாக கேள்விப்பட்டு நான் சிலம்பக்கூடம்விட்டு அன்று புறப்படும் ஸ்டீமரில் புறப்பட்டு ஊருக்குபோவதாக ரகுபதியிடம் சொல்லிவிடைபெற்றுக்கொண்டு புறப்பட்டேன், சிலம்பக்கூடத்திலிருப்பவர்களெல்லாம் என்னை சந்தோஷமாக வழியனுப்பினர்கள் நான் இவர்களுக்கு கஸ்டம் அவுசுக்குபோவதாய் போக்கு காட்டிவிட்டு நேரே இராயபுரம் போய் என் சைனகார வேஷத்தைகலைத்து

விட்டு, ஒரு சாதாரண வியாபாரியைப்போல் வேடம்பூண்டுகொண்டு கையில் என் கெட்டித்துப்பாக்கியை யெடுத்துக்கொண்டு ஒருவருக்கும் தெரியவிடாமல் மறைத்துக்கொண்டு மாலை மணி இரண்டுக்கே பீப்பில்ஸ்பார்க்குச்சென்று பிரபுக்கள் செல்லும்பாதையருகேபோய் நின்றுக்கொண்டிருந்தேன். அதேசமயம் நமது சவுரிமுத்துவும் ரகுபதியும் ஒரு கோச்வண்டியில் வந்து இறங்கினார்கள். இவர்களைக் கண்டும் காணாதவனைபோல் நான் இவர்களைபின்தொடர்ந்தேன். அச்சமயம் இவர்களிருவரும் ஓரிடத்திலும் அமராமல்அலைந்துகொண்டேயிருந்தனர். நானும் இவர்கள் நிழலைப்போலவேயிருந்தேன். இவர்களுக்கு அங்கு என்னவேலை யென்பதும், ஏன் ஓரிடத்திலிருந்து காக்ஷிகளைப் பார்க்காமல் அலைகின்றார்களென்றும் நான் நினைத்தேன். அச்சமயம் நல்ல நல்ல உடையுடுத்தின போக்கிரிகளும் திருட்டுபயல்களும் இவ்விருவரையும் சந்திப்பதும் ஏதேதோ கடுதாசிகளில் பொதியப்பெற்ற பொட்டளங்களைக் கொடுப்பதும் போவதுமாக இருந்தார்கள். இவ்விஷயத்தில் எனக்குக்கொஞ்சம் சந்தேகம் ஏற்பட்டதெனினும் பூரணமா யறிய ஆவல்கொண்டிருந்தே னாதலால் அவசரப்படாமல் கவனித்துகொண்டே சென்றேன். அன்றிரவு மணி பதினொன்றுக்குமேல் இவ்விருவரும் புறப்பட்டு மூர்மார்கெட்வழியேசெல்வதற்குபதிலாக சால்ட்கொட்டார் வழியாக திரும்பினார்கள். இவர்களைத் தொடர்ந்தே நான் சென்றேன். மிருகங்கள் வைக்கப்பட்டிருக்கும் இடத்தண்டைவந்ததும், ஐந்தாறுபேர்கள் நின்றுக்கொண்டிருக்ககண்டேன். எனக்கு இச்சந்தர்ப்பத்தில் ஒருவித ஊக்கமும் பதைபதைப்பும் உண்டாயிற்றெனினும் சிறிது நிதானித்து அடுத்தாப்போலிருந்த ஒரு பெரிய மரத்தின பின்னால் பதுங்கி நின்றுகொண்டுபார்த்தேன். இதேபமயம் ஒரு ஸ்திரீ கீழே விழுந்திருந்தாள் மூச்சுப் பேச்சு ஒன்றும் இருப்பதாகத் தெரியவேயில்லை. அவள் மீதிருந்த நகையெல்லாம் கழற்றி விடப்பட்டிருந்தது. அங்கிருந்தவர்களெல்லாம் சவரிமுத்துவின் ஆள்கள் என்பதையும் ஸ்திரீயைக் களவாகதூக்கிவந்து அவளதுநகைகளை கழட்டிக்கொண்டு கொன்றுவிடுவதற்காக ஆலோசித்துக்கொண்டிருந்தனர். அதேசமயம் நானும் என் கைத்துப்பாக்கியை கையில்வைத்துக் கொண்டேன். அப்போது சவுரிமுத்து தன் கையில் ஒரு கட்டாரியை யெடுத்து கீழ்விழுந்திருந்த பெண்ணை குத்த ஓங்கினான். நான் தாமதித்தால் மோசமாய் விடுமென்றெண்ணி என் கையிலிருந்த துப்பாக்கியைச் சவுரிமுத்து

வின் கைக்கு நேராய்க் குறிபிடித்துச் சுட்டேன். அக்குண்டானது சவுரிமுத்துவின் கையிலிருந்த கட்டாரியைக் கையைவிட்டுக்கழற்றிக் கொண்டு போய்விட்டது. சப்தம் கேட்டதும் அவ்விடத்தில் ஒருவரும் நிற்கவில்லை. எல்லோரும் ஓடிப்போய் விட்டனர். நான் உடனே அப்பெண்ணின் அருகிற்சென்று அவளையெடுத்துத் தோளின் மேல் போட்டுக்கொண்டு நேரே என் நண்பர்வீட்டுக்குக் கொண்டுபோனேன். அந்தவீட்டில் அர்த்தராத்திரியாகியும் ஒருவரும் நித்திரை புரியாமல் விசனப்பட்டுக்கொண்டிருந்தார்கள். நான்போய்கதவை தட்டினதும் உள்ளிருந்தவர்கள் யார் என்று கேட்டுக்கொண்டே வந்து கதவைத்திறந்தனர். நானும் அப்பெண்மணியைத் தூக்கியவண்ணமே உள்ளே சென்று கட்டிலின் மீது கிடத்தினேன். அவ்வீட்டிலுள்ளாரனைவரும் வந்து அவளைச் சூழ்ந்துகொண்டு "அடி அம்மா லக்ஷிமி" என்று கதறினர்கள் நான் அவர்களை சத்தமிடாதபடி தடுத்துவிட்டு பெண்ணின் அருகிற் போய் சுவாசத்தைப் பார்க்கையில் சுவாசம் சிறிது சிறிதாக வருவதைக்கண்டு அங்கிருந்த பெண்களைப் பார்த்து, வெந்நீரில் தேகத்தை கழுவி, சுத்த வஸ்திரம் தரித்துவிடுங்கள் என்று சொன்னதும் அவர்கள் அப்படியே செய்ய அச்சமயம் நான் அப்பெண்ணின் தகப்பனைபார்த்து "உங்கள் மகள் பிழைத்திருக்கிறதாக வெளிக்குக் கூறுமலே ரகஸ்யமாகவே யிருக்கவேண்டுமென்று கூறிவிட்டு இனி லட்சுமிக்கு பயமில்லை. வெளிக்கு கூறவேண்டாம் என்று சொல்லிவிட்டு வெளியேவந்தேன். அப்போது மணி மூன்ருயிற்று. அதே சமயம் ராஜரத்தினம் ஒரு ராந்தலைகையில் பிடித்துக்கொண்டு நேரே வந்துகொண்டிருந்தான். வந்தவன் என்னைப் பார்த்துவிட்டு ஒன்றும் கூறுமலே போய்விட்டான். மறுநாள் போலீஸ் மேலதிகாரிகளால் இந்தக்கேஸைக் கண்டுபிடிக்கவேண்டிய உத்தரவு அனுப்பப்பட்டது. கேஸ் கண்டுபிடிக்கும்முயற்சியை நான் ரஸாயன முறையில் முயற்சித்துக்கொண்டிருக்கும் சமயம் ராஜரத்தினம் இடையில்வந்து அதைக்கெடுத்துவிட்டான். அதற்கும் நான் பொறுத்துக் கொண்டிருந்து என் முயற்சியினைக் கைவிடாதே யிருக்கையில் ஒரு நாள் ஆபீசுக்குப்போனேன். அவ்விடத்தில் இன்றைய தினம் மாலை நான் என் சொந்த ஊருக்குப்போவதால் எனக்கு ரஜா வேண்டும் என்றெழுதிய ராஜரத்தினத்தின் கடிதமும், அதில் துரை உத்தரவளித்துக்குறித்திருப்பதையும் கண்டு பழையமண்ணடி சிலம்

பக்கூடத்திற்கு போனேன். அவ்விடத்தி லொருவருமில்லாமல் ஒரு முடிசசுமா, கிமட்டுமிருந்தான். அவனையுறவாட கருதியவனிடம் நய மாகப்பேசி காபி ஹோட்டலுக்குக் கூப்பிட்டேன். அவனும் அதற் கிசைந்து என்னுடன் வந்தான் நானும் அவனுமாக காபி ஹோட்ட லுக்குச் சென்று பட்சணம் காபி சாப்பிடும் சமயம் ரகுபதியின் வீடு. எங்கேயோ அவரைக் காண்பதற்கில்லையே யென்றேன். அச் சமயம் அவன் அதற்குப் பதிலாக அவர் மதுரைக்கு நேற்றுமெயிலில் புறப்பட்டுப் போய் விட்டார் என்றான். நான் ஆச்சரியப்பட் டேன் அதைக்கண்ட அவன் உண்மையில் மதுரைக்குப் போனா னென்றும் இனி சென்னை வரமாட்டானென்றும் கூறினன். நானும் சரியென்று ஒத்துக்கொண்டு வீடுநோக்கி வந்து அன்றுமாலை 6-15 மணிக்குப் புறப்படும் போட் [Boat-Mail] மெயில் ஏறி மதுரை வந்து சேர்ந்தேன். மதுரைக்கு வந்து பத்துநாள் வரையில் உளவு விசாரித்துக்கொண்டும் மதுரை டவுன் எவ்வளவு விஸ்தீரணமான தென்றும் மதுரையில் எத்தனை சந்துகள் இருக்கின்றதென்றும், மதுரையின் சகல விஷயங்களையும் அறிந்துகொண்டேன் என்றாலும் மதுரைவாசிகளில் இரண்டொருவரை யறிந்திருத்தல் நலமென்றெ ண்ணி யிவ்விடத்தில் இவரிடம் சினேகம்வைத்துக்கொண்டிருந்தேன் அந்த இடத்தில் ரகுபதியும் ராஜரத்தினம் என்ற பெயருடனேவந்து போய்க்கொண்டிருந்தான். இப்படியிருக்கும்நாளில் நானும் ராஜரத் னமும் இன்னும் இருவருமாக பீம விலாசத்தில் காபி சாப்பிடவெண் ணி காபிஹோடலுக்குள் நுழைந்தோம். அந்தசமயம் நான் அமர்ந் திருக்கும் மேஜையின்முன்புறமாக சவுரிமுத்து என்னும் ஷண்முகம் செட்டியாரும் வந்து அமர்ந்திருக்கக் கண்டு அவரைப் பின்தொடர வெண்ணியதில் அநுகூலமாகவே அவரும் விக்டோரியா மிமோரியல் ஹாலுக்குள் சென்றார். நானும் சென்றேன். அங்கு நமது இரத் தினமாலையைக் கண்டேன். ஆனால் என் நோக்கமெல்லாம் செட்டி யார்மீதே யிருந்தது. இதே சமயம் காட்சி ஆரம்பிக்கப்பட்டதும் விளக்கு அணைந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் செட்டியாரைக் காணவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தேன். இரத்னமாலையின் அரு கிலிருக்கக் கண்டேன். சிறிது நேரத்திற்கெல்லாம் கொலை யென்று கேட்டது. செட்டியார் போனவழியே தெரியவில்லை. இரத்னமாலை யைப் பரிசோதிக்கும் பொருட்டு டாக்டர் போல் நடித்தேன். அத னல் செட்டியார் கைகுட்டையும் இரத்தினமாலையின் மோதிரமும்,

ஒரு கடிதமும் கிடைத்தது. இதையெல்லாம் எடுத்து சேமித்து வைத்துக்கொண்டு, சென்னைக்கு தந்தியடித்து கைகுட்டையின் விளிம்பிலுள்ள நம்பரைப்பற்றி தெரிந்துகொண்டு குடுகுடுப்பாண்டி போல வேடம்பூண்டு நடித்து செட்டியாரிடம் ஒரு குடுத்துணியைப் பெற்று அதன் நம்பருக்கும் கைகுட்டையின் நம்பருக்கும் ஒத்திட்டுப் பார்த்தேன். அது சவுரிமுத்துவினது என்று தெரிந்துக்கொண்டதுடன் சவுரிமுத்துக்கும் (ஷண்முகம் செட்டியாருக்கும்) ராஜரத்தினத்திற்கும் [ரகுபதிக்கும்] சம்மந்தமுண்டென்றும், இவர்களிருவரும் கூட்டுக் கொள்ளையடிக்கும் கள்ளர்களென்றும் தெரிந்துகொண்டு அவர்களைக் காவல்புரிந்துகொண்டும் இவர்களுடைய ரகஸ்யங்களை அறிந்துகொண்டுவரும் நாளில் ராஜரத்னம் என்னும் ரகுபதி ஜலப்பிரதேசம் போவதையறிந்துகொண்டு அவனை தடுத்து அரஸ்டுசெய்ய உத்தேசித்துக்கொண்டிருக்கும் சமயம் ஒரு நாளிரவு ராஜரத்தினம் புறப்பட்டு ஷண்முகஞ்செட்டியார் தொழிற்சாலைக்குச் சென்று இரும்பு பெட்டியை யாராய்ந்து அதிலிருந்து 5கடிதங்களையெடுத்துக்கொண்டுவெளிப்பட்டசமயம் அதைக்கைப்பற்றிக்கொண்டு அதிலுள்ள விஷயங்களைக் கவனித்து இவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து விசாரணை முடிந்துபோனது.

* * * *

இரத்தினமாலை கையிலணிந்திருந்த நக்ஷத்திர வைர மோதிரம் இதோ இருக்கிறதென்று கொடுத்தான்.

லக்ஷிமியின் வைரநகைகளைப் பெட்டியிலிருநது எடுத்துக்கொடுத்தான்.

எல்லாரும் ஆச்சரியமும் வியப்பும் அடைந்தனர். இதேசமயம் சோமசுந்தரம் பிரபு தான் கொடுப்பதாய் உத்தேசித்த பரிசு ரூபாய் 50,000 த்தையும் கொடுத்தார்.

லக்ஷிமியின் தகப்பனாரும் தான் சொல்லியிருந்தபடி ரூபாய் 50,000 த்தையும் கொடுத்தார்.

கலெக்டர் முதலியவர்கள் ராஜாங்கச் சார்பாக ஒரு தங்க பதக்கம் பரிசு கொடுத்தார்.

எல்லாரும் விடைபெற்றுச் சென்றனர். பிரபு சோமசுந்தரம் வீட்டில் ராமலிங்கமும், லட்சுமியும் அவளது தாய்தந்தையரும் தங்கியின்பமுற்றிருந்தனர்.

# அத்தியாயம்-9

## முடிவுறை.

மதுரைநகரில் எங்கு பார்த்தாலும் இரத்னமாலைகொலையைப்பற்றியும், லட்சுமியின் கொலையைப்பற்றியும், அவர்கள் உயிர்பெற்றிருப்பதைப்பற்றியும் நக்ஷத்திர வைர மோதிரத்தைப்பற்றியும் அது கிடைத்த விபரமும் துப்பறியின் சாமார்த்தியத்தைப்பற்றியும், மதுரையில் வெளியாகும் பத்திரிகைகளிலும் சென்னை பத்திரிகைகளிலும் ஆடம்பரமாகவுடு பிரசுரிக்கப்பட்டிருந்தன. இதே பேச்சுதான், ஆலயத்தி லும் ஆற்றங்கரையிலுங் கூடவென்னலாம்.

பிரபு சோமசுந்திரம் வீட்டிற்கு எதிரில் வண்டிகள் வந்து பந்தியாய் நிற்பதும், ஜனங்கள் திரள்திரளாகபோவதும் வருவதுமாயிருக்கிறார்கள். இன்ன விசேஷமென்று தெரியவில்லையெனினும் கொலைக் கேஸ் நடந்ததிலிருந்து. ஊரிலுள்ளவர்கள் வருவதும் விசாரிப்பதும் போவதுமாயிருந்து வந்தனர்.

ஒரு மாதத்தின் பிறகு பிரபு சோமசுந்தரம் புத்திரி ரத்னமாலைக்கும் துப்பறியும் ராமலிங்கத்துக்கும் வெகுசிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. இக்கலியாணத்திற்கு சென்னையிலிருந்து அநேகரும் வேலூரிலிருந்து அநேகரும் மதுரையிலும் மற்றும் ஊர்களிலிருந்தும் அநேக பிரபுக்களும் உத்தியோகஸ்தர்களும் வந்து சேர்ந்து சிறப்புற கலியாணத்தை நடத்தி வைத்தனர்.

ராமலிங்கத்தின் சொந்தபந்துவாகிய லட்சுமிகாந்தனுக்கும்லட்சுமிக்கும்கூடத் திருமணம் நிச்சயிக்கப்பட்டு அடுத்த பதினைந்தாம்நாள் நிறைவேறிற்று. வந்தவர்களுக்கெல்லாம் விருந்து, உபசரிப்பு முதலியன வெகு விமரிசையாய் நடந்தேறியது.

ஏழைகளின் வாழ்த்தொலியும் நல்லோர்களின் ஆசி ஒலியும் வெகு ஆனந்தமாயிருந்தது.

* * * *

ராலிங்கமும் ரத்தினமாலையும் புத்திரபாக்கியங்களுடன் மதுரையில் க்ஷேமமாக வாழ்ந்துவந்தானெனினும் தனது துப்பறியும்தொழிலையும் விடாமலே யநுசரித்து வந்தான்.

லட்சுமிகாந்தனும்,லட்சுமியும் சென்னையில்புத்திரமித்ர களத்திருடன் வெகு நேர்மையுடன் வாழ்ந்து வந்தான்.

யாவரும் வாழ்ந்து வந்தனர்.

சுபம் ! சுபம் !! சுபம் !!!

# வருஷ சந்தா அணா 14.

ஆயிரக் கணக்கான சந்தாதாரர்களை யுடையதும், தற்கால நாகரீகத்திற்கேற்றவாறு அரிய பெரிய விஷயங்கள் நிறைந்த

# ரஞ்சித போதினி

கதை, காவ்யம், சரித்திரம், நவீனம், புராணம், இதிகாசம், அநுபவ முதலிய விஷயங்களைப் புனைந்துகொண்டு வெளிவரும் ஓர் மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.



இதில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சதுர்வித புருஷார்த்தங்களையு மளிப்பதோடு அறிவினைப் பெருக்கி ஆனந்தத்தையு மளித்து, ஸ்திரீ, புருஷர், சிறுவர், சிறுமியர், விருத்தர், பண்டிதர், பாமரர், பக்தர், போகிகள், சைவர், வைணவர், வேதாந்திகள் முதலிய பலருக்கும் பயன்படுவனவாய பல்விஷயங்களை தன்னகத் தடக்கி இகபரசாதனங்களை எளிதிலுணர்வித்து பல்லோரும் பயனடையச் செய்வதற்கெனவே மிகு ரம்மியமுடன் பிரதி மாதமும் வெளிவருகின்றது. இதனைத் தமிழ்நாட்டு தேசாபிமானிகளும் பாஷாபிமானிகளும் மற்றுமுள்ள அறிஞர்களும் ஆதரிப்பதோடு விஷயதானமும், நற்சாக்ஷி பத்திரங்களும் அளித்து ஊக்கமுண்டாக்கி வருகின்றனரென்றால் ரஞ்சித போதினியின் மேன்மையைப்பற்றி நாம் கூறவேண்டுவது வேறு ஒன்றுமேயில்லை யென்பது திண்ணம்.

நமது ரஞ்சித போதினி தமிழ் நாடுகளிலும் இலங்கை, பர்மா, மலைய நாடு, தென் ஆப்பிரிக்கா, இன்னும் உலகத்தில் தமிழர்கள் வசிக்கும் மற்ற எல்லா இடங்களிலும் சென்று உலாவுகின்றது

இது உலகத்தின் பலபாகத்திலும் புகுந்து சஞ்சரிக்கும் நோக்கத்தோடேயே இதன் சந்தா தொகையை மிகக்குறைவாக அணா 14 ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உடனே சந்தாதாரராக முற்படுங்கள்.

விலாசம்:—"ரஞ்சித போதினி" ஆபீஸ்,
12, அருணாசல முதலி தெரு,
சௌகார்பேட்டை போஸ்டு, சென்னை.